ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 50

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த மாதந்தோறும் வெளிவரும் பத்ரிகை

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

ஸம் 5 | பிப்ரவரி 1953 நந்தன ஸூ தை மீ | 2 இதழ்

## இராமானுச நூற்றந்தாதிப் பாசுரம் 50

உதிப்பனவுத்தமர்சிந்தையுள் * ஒன்னலர்நெஞ்சமஞ்சிக்
கொதித்திட மாறி நடப்பன * கொள்ளைவன்குற்றமெல்லாம்
பதித்தவென்புன்கவிபாவினம் பூண்டன பாவுதொல்சீர்
எதித்தலைநாதன் * இராமானுசன்றன்னிணையடியே.

---

உலகமெங்கும் பரவின நித்யகல்யாண குணங்களையுடையவரும் யதிகளுக்குத் தலையான நாயகருமான எம்பெருமானருடைய திருவடியிணைகளானவை எப்படிப்பட்டவை என்றால், உத்தமாதிகாரிகளின் திருவுள்ளங்களிலே பிரகாசிப்பவை; பிரதிபக்ஷிகளின் நெஞ்சமானது அஞ்சிப் பரிதபிக்கும்படி மாறிமாறியிட்டு நடக்குந்தன்மையுடையவை; அபாரமான வலிய தோஷங்கள் யாவும் அழுந்திக்கிடக்கிற என்னுடைய இளைய புன் கவிதையான பாசுரங்களைத் தோத்திரமாகப் பெற்றுக்கொண்டவை.

திருவரங்கத்தமுதனார், தமக்குப் பரமப்ராப்யமான எம்பெருமானரது திருவடிகளை மாத்திரம் இப்பாட்டில் வருணிக்கிறார். எம்பெருமானருடைய திருவடிகள் எங்கிருக்கின்றன? எங்கே நடக்கின்றன? என்று ஒருவர்கேட்டால் அதற்கு ஸாமான்யமாக என்ன விடையளிக்கக்கூடும்? அவருடைய திருவடிகள் அவருடைய திருமேனியிலிருக்கின்றனவென்றும், அவை கோயில்திருவீதிகளில் நடக்கின்றனவென்றும் விடையளிக்கக்கூடும். அமுதனார் அருளிச்செய்வது விலக்ஷணமாகவன்றோ விருக்கும். ஆழ்வான் ஆண்டான் எம்பார் பிள்ளான் முதலான உத்தமர்களின் உள்ளத்துள்ளே உறைகின்றனவென்றும், சங்கரபாஸ்கர யாதவபாட்ட ப்ரபாகராதிகளான விமதர்களின் மார்பில் தோன்றிய பிரதிகூலர்கள் யார் யாரோ அவர்களது உள்ளத்தில் ஒய்யாரநடை நடக்கின்றனவென்றும் அருளிச் செய்கிறார். இத்தால் அநுகூலர்களோடு ப்ரதிகூலர்களோடு வாசியற எல்லாரும் ஸ்வாமி திருவடிகளையே உள்ளத்திற்கொண்டிருக்கிறார்களென்பது விளங்கும். அநுகூலர்கள் அன்பினால் சிந்திப்பர்கள். பிரதிகூலர்கள் தங்களுடைய செருக்கையடக்கின பெருமைக்குத் தோற்றுச் சிந்திப்பர்கள் என்க. .... ... .... (*)

# முக்கியமான அறிக்கைகள்.

1. ஈடு முப்பத்தாறாயிரப்படி பகவத்விஷயம் அச்சிட்டுப் பூர்த்தியாகிவிட்டதென்று பக்தர்கள் அறிவர்கள். முதற்பத்தில் தனியன்களும் டைடல்பேஜும் விடுபட்டிருக்கிறது. ஒன்று முதல் ஐந்து பத்துக்களை பயிண்டு செய்வித்துக்கொள்ளும்போது அது அவச்யமாதலால் அது தனியாக அச்சிட்டு இதில் வைத்தனுப்பப்படுகிறது. அந்த 4 பக்கத்தையெடுத்து பகவத் விஷயத்துடன் சேர்த்து பயிண்டு செய்வித்துக்கொள்க. அது யாருக்குச் சேரவில்லையோ அவர்கள் ஒரு கார்டு எழுதி வருவித்துக்கொள்க.

2. Sri Ramanuja என்கிற ஆங்கில பத்திரிகை மூன்று மாதங்களுக்கொருமுறை பிரசுரஞ் செய்யப்படுவது முதல் பத்ரிகை வெளிவந்துவிட்டது. அபேக்ஷையுள்ளவர்கள் வருடச்சந்தா 2 ரூ அனுப்பி வரவழைத்துக் கொள்க. விலாஸம் P. B. அண்ணங்கராசாரியர், காஞ்சீபுரம். தனிப்பத்திரிகை ஒன்றின் விலை 0—8—0 மாத்திரம்.

3. **ஸ்ரீராமாயண ஸௌரபம்.** இப்புத்தகம் ஸமீபகாலத்தில் வெளியிடப்பட்டிருக்கின்றது. திவ்யப்ரபந்தங்களுக்கு வியாக்கியானங்கள் செய்தருளின பெரியவாச்சான் பிள்ளை முதலான போராசிரியர்களால் ஆங்காங்கு ஸ்ரீராமாயணச்லோகங்கள் பல பல எடுத்துக் காட்டப்பட்டுப் பரமபோக்யமாக வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கின்றன. அந்த பாகங்களைத் தனியாகவெடுத்து ச்லோகங்களையும் காண்டக்ரமமாக வரிசைப்படுத்தி அந்த வியாக்கியானத்துடன் அச்சிடப்பட்டிருக்கின்றது. இப்புதகத்திற்கே ஸ்ரீராமாயண ஸௌரபமென்று பெயர். உண்மையில் ஸ்ரீராமாயணத்திற்குப் பரிமளம் நம் ஆசார்யர்களின் திவ்ய வியாக்கியானங்களினுலேயாதலால் இந்நூலுக்கு இத்திருநாமமிட்டது மிகப்பொருத்தமேயன்றோ. இந்த ஸ்ரீகோசம் ஒவ்வொருவருடைய கையிலும் ஸதா இருக்கத்தக்கது. இதன் விலை 1—8—0 கிடைக்குமிடம் க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

4. **ஸ்தோத்ரங்களின் வியாக்யானங்கள்.** கூரத்தாழ்வானருளிச்செய்த பஞ்சஸ்தவத்தில் ஸுந்தரபாஹுஸ்தவத்திற்கும், பட்டரருளிச்செயல்களில் ஸ்ரீ குணரத்நகோசத்திற்கும் P. B. A. தமிழுரை வெளிவரவேண்டியது பாக்கியிருக்கிறது. இதுதவிர, ஸ்ரீரங்கராஜஸ்தவ-உத்தரசதகம், வரதராஜஸ்தவம், ஸுதர்சநசதகம் இவற்றின் தமிழுரைகள் பல வருஷங்களுக்கு மூன்பு அச்சாகியிருந்தாலும் தற்காலம் துர்லபமாயிருப்பதால் அவை மறுபதிப்பாக வேண்டியதும் அவசியமாயிருக்கிறது. எல்லாம் அச்சிடப்பட்டே வருகின்றன. இவை பிரதிமாதமும் ஸஞ்சிகை ஸஞ்சிகையாக வெளியிடப்பட்டு வரவேணுமென்று அன்பர்கள் கோரிபடி முடிவு செய்யப்பட்டது. ஏனென்றால் மேலேகுறித்த ஸ்தோத்ரக்ரந்தங்களைப் பற்றிப் பலர் அடிக்கடி கடிதங்கள் எழுதுகிறார்கள். அவர்களுக்கு பதில் தெரிவிக்க சிரமமாகிறது. மாதந்தோறும் அச்சாகிற பாரங்களைச் சேர்த்து ஸஞ்சிகையாக்கி அனுப்பிவந்தால் அவர்களுக்கு த்ருப்தியாகுமென்று தோன்றி இவ்வண்ணம் முடிவுசெய்யப்பட்டது. இது ஸ்ரீராமாநுஜன் ஸப்ளிமெண்டரியாக வெளியிடப்படுகிறது. ஸ்ரீராமாநுஜன்—A. ஸ்ரீராமாநுஜன்–B. ஸ்ரீராமாநுஜன்—C. என்கிற முறையில் இது வெளியாகிறது. இம்மாதத்தில் ஸ்ரீராமாநுஜன் A. ஸித்தமாகியிருக்கிறது. இதில் ஸுந்தரபாஹுஸ்தவம் 5 பாரமும் ஸ்ரீ குணரத்னகோசம் 3 பாரமும [ஆக 8 பாரங்கள் 64 பக்கங்கள்] சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதற்கு வருடச்சந்தா 5 ரூ. தனிப்பட்டது. ஷை சந்தாவையனுப்பி 'ஸ்ரீராமாநுஜன் ஸ்தோத்ர விபாகம் எமக்கு அனுப்பி வரவேணும்' என்று தெரிவிப்பவர்களுக்குமாத்திரம் அந்த ஸஞ்சிகை அனுப்பப்படும். 50 பாரங்கள் (அதாவது 400 பக்கங்கள்) அச்சிட்டுக் கொடுத்தபிறகே அடுத்தமுறை சந்தா வசூலிக்கப்படும். முன்பண மனுப்பாதவர்களுக்கு

இது கிடைக்காது. தனிச்சஞ்சிகை வேண்டுமவர்கள் போஸ்டேஜ் உட்பட ஒரு ரூபாயனுப்பினல் தனிஸஞ்சிகையனுப்பப்படும். "க்ரந்தமாலா ஆபீஸ்—காஞ்சீபுரம்" விலாசத்திற்கு எழுதிக்கொள்வது.

5. தேசிக ஸ்தோத்ரமாலா—முதல் மலர் (இரண்டாம் பதிப்பு) முடிந்து வெளிவந்து விட்டது. விலை 1—8—0. இதில் அடங்கியுள்ள வ்யாக்க்யாநஸஹிதஸ்தோத்ரங்களாவன, ஹயக்ரீவஸ்தோத்ரம், தேசிகமங்களம், பரமார்த்தஸ்துதி, வைராக்யபஞ்சகம், கோதாஸ்துதி. மேலும் தேசிகஸ்தோத்ரங்களுக் கெல்லாம் உரை க்ரமேண வெளிவரும்.

---

# திருமலையில் கோஷ்டி விசேஷம்.

இப்பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமி சென்னைத் தொண்டமண்டலம் கலாசாலையில் சனிக்கிழமைதோறும் மாலை வேளையிலும் ஞாயிற்றுக் கிழமை தோறும் காலைவேளையிலும் 1931 ஆம் ஸ்ரீ ஜூலை மாதம் முதலாக உபந்யாஸங்கள் நடத்திவருவது உலகமறிந்ததே. சனிக்கிழமைகளில் ஸ்ரீராமாயணம் ஸ்ரீ பாகவதம் பகவத்



கீதை முதலான ஸம்ஸ்க்ருத இதிஹாஸபுராணதி க்ரந்தங்களில் ஒன்று ப்ரவசனம் செய்யப்படுகிறது. ஞாயிற்றுக்கிழமைகளில் த்ராவிட வேதாந்த ஸம்பிரதாய க்ரந்தங்களில் ஒன்று பிரவ

சனம் செய்யப்படுகிறது. 1937வது வருஷம் பிப்ரவரி மாதத்தில் நம்மாழ்வாருடைய திருவாய்மொழியின் வியாக்கியானமான பகவத்விஷயம் ஞாயிற்றுக்கிழமைகளில் உபந்யாஸம் செய்ய ஆரம்பிக்கப்பட்டது. அதில் ஆறுவது நூறில் பத்தாவது பதிகம் * உலகமுண்ட பெருவாயா * என்பது திருவேங்கடமுடையான் விஷயமானது; அதன் உபந்யாஸம் ஸமீப காலத்தில் ப்ராப்தமாயிற்று. அந்தப்பதிகத்தின் ப்ரவசனத்தைத் திருமலையிலேயே நடத்தி வைத்துக் கேட்கவேணுமென்கிற அவா சென்னை வாஸிகளான ஸகல பக்தர்களுக்கும்



இருந்தது. ஆனால் அந்தப்பதிகம் பூராவும் திருமலையில் உபந்யாஸம் செய்யப்பட்டால் 15 நாள் ஆகுமென்றும் அவ்வளவு காலம் பக்தர்கள் பெருந்திரளாய்த் திருமலையில் வஸிக்க ஸௌகர்யம் நேராதென்றும் தோன்றி அப்பதிகத்தின் முடிவான இரண்டு பாசுரங்களை மட்டும் திருமலையில் பிரவசனம் செய்விப்பதென்று முடிவு செய்து, சென்ற நவம்பர் மாதத்தில் 8, 9 தேதிகளான சனி, ஞாயிறுகளில் அப்படியே திருமலையில் திருவேங்கடமுடையானுடைய ஸன்னிதியில் உபந்யாஸ ரூபமான சாத்துமுறை நடத்தப்பட்டது. சனிக்கிழமை மாலை 4 மணியிலிருந்து 6 மணி வரையில் * அகலகில்லேனிறையு * என்கிற பாசுரமும், மறுநாள் ஞாயிற்றுக்கிழமை காலை 8 மணியிலிருந்து 10 மணி வரையில் * அடிக்கீழமர்ந்து புகுந்து * என்கிற பாசுரமும் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி உபய ஜீயர் ஸ்வாமிகளின் தலைமையில் ஸ்ரீஸ்வாமியால் அதிரஸமாக உபந்யஸிக்கப்பட்டு சாத்துமறை செய்யப்பட்டது. அச்சமயம் சென்னை முதலான விடங்களிலிருந்து பல நூற்றுக்



கணக்கான பக்த பாகவத ஆஸ்திக மஹான்கள் வந்திருந்து இந்த வைபவத்தில் கலந்து கொண்டு களித்தார்கள். அப்போது மூன்று ஸந்தர்ப்பங்களில் எடுக்கப்பட்ட க்ரூப் போட்டோக்கள் ஈண்டு வெளியிடப்பட்டன. இப்படிக்கு,

உடனிருந்து அநுபவித்தவர்களில் ஒருவரான,

ந. ஜீயப்பங்கார்.

## நாற்கொள்கையின் நிர்ணயம்

பகவத்விஷயம் ஈடுமுப்பத்தாறுயிரப்படியில் (5-7-3) * கருளப்புட்கொடி சக்கரப்படை * என்கிற வானமாமலைப் பாசுரத்திற்கு அவதாரிகை இங்ஙனேயுள்ளது;—"அருளாய் என்றீர்; அருளக்கடவோம்; அதிலொரு தட்டில்லை; ஆனாலும் * சாஸ்த்ரபலம் ப்ரயோக்த்ரி * *கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத் * அன்றே; அருள்பெறுவார் பக்கலிலேயும் சிறிது உண்டாக வேணுங்காணுமென்ன; இது, மேலுத்தைக்கு இட்ட மர்யாதையோ? கீழுத்தைக்குமேதேனு

முண்டோ? ஆனபின்பு இத்தலையில் கிஞ்சித்காரத்தைவிட்டு உன் க்ருபையாலே செய்தருளாயென்கிறார். இவ்வளவும் வர இதுக்குமுன்பு நீ நிர்ஹேதுகமாக விஷயீகரித்தபின்பு மேலும் நீ செய்தருளவேணுமென்கிறார்." என்று. இதில் எம்பெருமானுடைய வாதம் ஒருவிதமாயும் ஆழ்வாருடைய ப்ரதிவாதம் மற்றொருவிதமாயுமுள்ளது. எம்பெருமானுடைய வாதம் என்னவென்றால், பேறு பெற வேண்டியவர்கள் ஒரு கைம்முதலுமில்லாமல் வாளா பெற்றுவிடமுடியாது; பேறுபெறுதற்குரிய வழிகளை [ஸாதனங்களை] நான் சாஸ்த்ரங்களில் பஹுமுகமாகத் தெரிவித்திருக்கிறேன்; அவற்றை யநுஷ்டித்துப் பேறுபெற முடியுமேயொழிய வெறுமனே பெற்றுவிடமுடியாது. அப்படி பெறுவதானால் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வரும். சாஸ்த்ரார்த்தங்களும் கலங்கிப்போகும். அப்படியாகாமைக்காக நான் நூல்வரம்பு இட்டிருக்கிறேன்; அதைக் கடக்கலாகாது; அதைப் பரிபாலனம் பண்ணினார்க்கொழிய மற்றையோர்க்குப் பேறுகிடைக்காது—என்பது எம்பெருமானுடைய வாதம். இதில் ஒருவிதமான குறையும் சொல்லமுடியாது. *மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார் இதை உள்ளபடி தெரிந்துகொள்ளாதவருமல்லர். *வணக்குடைத் தவநெறி வழிநின்று புறநெறிகளை கட்டு உணக்குமின்பசையற அவனுடையுணர்வுகொண்டுணர்ந்தே* (திருவாய்மொழி 1—3—5) என்பது முதலான பாசுரங்களில் இதனை வெளியிட்டுமிருக்கிறார். ஆனால், எம்பெருமானுக்கு ஆழ்வார் செய்யும் ப்ரதிவாதமென்னவென்றால், கேண்மின்;

எமக்கு நீ கரணகளேபரப்ரதானம்பண்ணி எம்மை நீ யுண்டாக்கினது நாங்கள் பிரார்த்தித்தோ? இல்லையே; உன்னுடைய நிர்ஹேதுகக்ருபையினாலன்றோ செய்தாய். இதனால் ஸம்ஸாரிகள் பக்கலிலே உனக்கொரு நிர்ஹேதுகக்ருபையுண்டென்று தெரியவருகிறது. அந்த க்ருபை நித்யஸ்ரீர்நித்யமங்களமாக எப்போதும் விளங்கக்கடவதேயன்றி ஒருகாலிருந்து மற்றொருகால் மறையுமதன்றே. அந்தக்ருபையைக்கொண்டே பரமபுருஷார்த்தத்தையும் தந்தருளத்தட்டென்ன? முதலில் ஒரு கைம்முதலையும் எதிர்பாராமல் காரியம் செய்த நீ இப்போதுமாத்திரம் பேற்றுக்குக் கைம்முதல் வேணுமென்கை யுக்தமாகுமோ? என்று.

ஆழ்வாருடைய இந்த ப்ரதிவாதம் யுக்தந்தானோ? என்று விமர்சிக்கவேண்டும். ஆதியில் எம்பெருமான் நமக்குக் கரணகளேபர ப்ரதானம் பண்ணினது நிர்ஹேதுகக்ருபையினாலாயினும், கரணகளேபரங்களைக் கொடுத்து சாஸ்த்ரங்களையும் காட்டிக்கொடுத்து அவற்றில் ஸ்வப்ராப்தி ஸாதனங்களையும் தெரிவித்து, அவ்வழியாகத் தன்னைப் பற்றுவார்க்கே பேறுதருவதாகத் தான் வெளியிட்டிருக்க, அதை தெரிந்துகொண்டவர் வழியல்லாவழியில் ப்ரதிவாதம் செய்வது யுக்தமாகாது. ஆகவே ஆழ்வாருடைய ப்ரதிவாதம் அயுக்தந்தானோ? என்ன வேண்டா; அயுக்தந்தானென்று முடிவுகட்டிவிடவும் வேண்டா. ஆழ்வாருடைய திருவுள்ளம் என்னவென்றால், பேற்றின் கனத்தையும் நாம் செய்யும் ஸாதநாநுஷ்டானத்தின் புன்மையையும் உற்று நோக்குமிடத்து அந்தக் கனத்த பேற்றுக்கு எதையும் ஸாதனமாக நினைக்கத் தகாது. அதற்கு ஏற்ற ஸாதனம் உலகில் கிடையவே கிடையாது. ஸர்வசக்தனான சரண்யன் இதையொரு வியாஜமாகக்கொண்டு காரியஞ்செய்கிறானென்று நாம் நினைக்கலாமேயொழிய இதை ஸாதனமாகக் கொண்டு செய்கிறானென்று நினைக்கவேதகாது. ஆகவே 'நிர்ஹேதுகமாக அருளாய்' என்று பிரார்த்திப்பதுதான் யுக்தமானதென்று கொண்டு அவ்விதமாக அருளிச் செய்து வருகிறார். இது ஸமஞ்ஜஸமானதே. மற்றது பின்.

---

ஸ்ரீ:

# ஸ்ரீவைஷ்ணவ பஞ்சாங்க ஸங்க்ரஹம்.

(ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர்.)

நந்தனஸூ தைமீ (4-2-53) கூரத்தாழ்வான் சாத்துமுறை முதல் விஜயஸூ திருவாடிப்பூரம் வரை

உத்ஸவ திருநக்ஷத்ராதி விவரங்கள்.

பிப்ரவரி தை.

4 22 பு. ஹஸ்தம். கூரத்தாழ்வான் சாத்துமுறை.
7 25 ச. நம்மாழ்வார் திருநக்ஷத்திரம்.
10 28 செ. ஏகாதசி. மணவாளமாமுனிகள் திருநக்ஷத்திரம்

மாசி

12 1 வி. மாசி மாதப்பிறப்பு.
13 2 வெ. அமாவாஸ்யா. திருவோணம். திருக்கச்சிநம்பிகள் உத்ஸவாரம்பம்.
21 10 ச. நம்பிள்ளை திருநக்ஷத்ரம்
22 11 ஞா. திருக்கச்சி நம்பிசாத்துமுறை
24 13 செ. ஏகாதசி. குலசேகராழ்வார் சாத்துமுறை. எம்பெருமானார் திருநக்ஷத்திரம்.
28 17 ச. பௌர்ணமி. மாசி மகம்.

மார்ச்சு

1 18 ஞா. தேவப்பெருமாள்தவனோத்ஸவம்
2 19 தி. ௸
3 20 செ. ௸
6 23 வெ. நம்மாழ்வார் திருநக்ஷத்ரம்
9 26 தி. மணவாளமாமுனிகள் ,,
11 28 பு. ஏகாதசி
12 29 வி. ச்ரவணத்வாதசி

பங்குனி

14 1 ச. பங்குனி மாதப்பிறப்பு.
15 2 ஞா. அமாவாஸ்யை }
16 3 தி. தேவப். உடையார்பாளையம் யுகாதி }
20 7 வெ. நம்பிள்ளை திருநக்ஷத்திரம் }
23 10 தி. தேவப். பங்குனியுத்தரத்தோடக்கம். எம்பெருமானார் திருநக்ஷத்ரம்
29 16 ஞா. பங்குனியுத்தரம். நஞ்சீயர்
30 17 தி. கந்தப்பொடி வஸந்தம்

ஏப்ரல்

2 20 வி. தேவப். பல்லவோத்ஸவத் தோடக்கம்
3 21 வெ. நம்மாழ்வார் திருநக்ஷத்திரம்
6 24 தி. மணவாளமாமுனிகள் ,,

ஏப்ரல் பங்குனி

8 26 பு. பல்லவோத்ஸவ ஸமாப்தி
10 28 வெ. ஏகாதசி. எம்பெருமானாருத்ஸவத்தொடக்கம்.

சித்திரை

13 1 தி. வருஷப்பிறப்பு. அமா. ரேவதி.
16 4 வி. நம்பிள்ளை திருநக்ஷத்ரம்.
19 7 ஞா. எம்பெருமானார் சாத்துமறை; மதுரகவிகள் அனந்தாழ்வான் உத்ஸவாரம்பம் }
20 8 தி. யதோக்தகாரி திருவவதாரம்; முதலியாண்டான் சாத்துமுறை.
22 10 பு. ஸ்ரீபாஞ்சராத்ர ஸ்ரீராமநவமி.
25 13 ச. ஏகாதசி
27 15 தி. ஹஸ்தம் தேவப்பெருமாள் திருவவதாரம் }
28 16 செ. சித்திரை. மதுரகவிகள் அனந்தாழ்வான் சாத்துமுறை
29 17 பு. சித்ராபௌர்ணமியுத்ஸவம்
30 18 வி. நம்மாழ்வார் திருநக்ஷத்ரம்

மேமீ

1 19 வெ. தேவப்பெருமாள் தோட்ட உத்ஸவம்
3 21 ஞா. மணவாளமாமுனிகள் திருநக்ஷத்திரம்
6 24 பு. திருவோணம்
9 27 ச. ஏகாதசி
12 30 செ. அமாவாஸ்யை

வைகாசி

14 1 வி. மாதப்பிறப்பு. நம்பிள்ளை திருநக்ஷத்ரம்
15 2 வெ. தேவப். கடை வெள்ளிக்கிழமையுத்ஸவம்
17 4 ஞா. எம்பெருமானார் திருநக்ஷத்ரம்
18 5 தி. நம்மாழ்வாருத்ஸவத் தொடக்கம்
22 9 வெ. தேவப். வைசாகோத்ஸவச் செல்வருத்ஸவம்.

மே வைகாசி

23 10 ச. தேவப். திருமுளைத்திருநாள்
24 11 ஞா. ,, ஆழ்வார் திருநாள்
25 12 தி. ,, த்வஜாரோஹணம்-முதல் திருநாள்
27 14 பு. வைசாகோத்ஸவம் பெரிய திருவடி.நம்மாழ்வார் சாத்துமுறை நரஸிம்ஹ ஜயந்தி
28 15 வி. நம்மாழ்வார் இயற்பாசாத்து.
30 17 ச. தேவப். ஆனைவாஹனம் மணவாளமாமுனிகள் திருநக்ஷத்திரம்.
31 18 ஞா. ,, திருத்தேர்

ஜூன்

2 20 செ. ,, திருத்தேர் அன்றே நிலைசேர்ந்தால் இன்று அவபிரதம். தூப்புல்தேசிகன் திருநக்ஷத்ரோத்ஸவம்.
8 26 தி. ஏகாதசி தேவப்பெருமாள் வஸந்தோத்ஸவத் தொடக்கம்
10 28 பு. நம்பிள்ளை திருநக்ஷத்ரம்
13 31 ச. எம்பெருமானார் திருநக்ஷத்ரம் வடக்குத்திருவீதிப்பிள்ளையுத்ஸவாரம்பம்.
14 32 ஞா. தேவப். வஸந்தோத்ஸவ அவபிரதம்.

ஆனி

15 1 தி. தேவப். கோடையுத்ஸவத் தொடக்கம்.
16 2 செ. ஸ்ரீமந்நாதமுனிகளுத்ஸவத் தொடக்கம்.
21 7 ஞா. தேவப். கோடையுத்ஸவ ஸமாப்தி.
22 8 தி. ,, ஆனிகருடன். பெரியாழ்வார் சாத்துமுறை. வடக்குத் திருவீதிப்பிள்ளை சாத்துமுறை.

ஜூன் ஆனி

23 9 செ. ஏகாதசி
24 10 பு. நம்மாழ்வார் திருநக்ஷத்திரம்.
25 11 வி. ஸ்ரீமந்நாதமுனிகள் சாத்துமுறை.
27 13 ச. பௌர்ணமி. மணவாளமாமுனிகள் திருநக்ஷத்ரம்
30 16 செ. திருவோணம். தேவப். ஜ்யேஷ்டாபிஷேகம்.

ஜூலை

3 19 வெ. பெருந்தேவித்தாயார் ஜ்யேஷ்டாபிஷேகம்.
10 26 வெ. எம்பெருமானார் திருநக்ஷத்ரம். அமாவாஸ்யை

ஆடி

21 6 செ. நம்மாழ்வார் திருநக்ஷத்ரம்.
22 7 பு. ஏகாதசி.
24 9 வெ. மணவாளமாமுனிகள் திருநக்ஷத்ரம்.
26 11 ஞா. பௌர்ணமி. தேவப். கஜேந்திரமோக்ஷ ஆடிகருடன். ஆளவந்தார் சாத்துமுறை. சந்த்ரக்ரஹணம்
30 15 வி. ப்ரதிவாதிபயங்கரம் அண்ணா உத்ஸவத்தொடக்கம்.

ஆகஸ்டு

3 19 தி. திருவாடிப்பூர வுத்ஸவத் தொடக்கம்
4 20 செ. நம்பிள்ளை திருநக்ஷத்ரம்
7 23 வெ. எம்பெருமானார் திருநக்ஷத்ரம்
8 24 ச. புஷ்யம் அண்ணா சாத்துமுறை.
9 25 ஞா. அமாவாஸ்யை.
12 28 பு. திருவாடிப்பூரம்.
13 29 வி. தேவப்பெருமாள் ஆண்டாள் ஊர்வலம்.



ஸ்ரீ:

ஆழ்வா ரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

# ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலை.

## இரண்டாம் பகுதி.

## 2. பெரிய திருமொழி யாயிரம்

---

### முதற்பத்து—முதற்பாட்டு—வாடினேன் வாடி.

வேல் வெட்டி நம்பியார், பிள்ளை கிழக்கே முக்காத மாற்றிலே யெழுந்தருளி யிருக்கச் செய்தே, ஒரு திருக்கார்த்திகையிலே "புறம்பே சிலரைக் கேட்டால் 'எளியன்' என்றிருப்பர்கள், இது பரிஹரிக்க வல்லாருமில்லை; இத்தைச் சொல்லிவரக் காட்ட வேணும்" என்று ஓராள் கொடுத்து வரக்காட்டினார்; அது என்னென்புதென்னில்; "பெருமாள் கடலைச் சரணம் புகுகிற விடத்தில் ப்ராங்முகத்வாதி நியமோபேதராய்க் கொண்டு சரணம் புக்கார், இதரோபாயங்களோபாதி ப்ரபத்தியும் ஸஹாயாந்தர ஸாபேக்ஷமோ?" என்று வரக்காட்ட; "அந்த உபாயத்துக்கு, உடன் வந்தியாயிருப்ப தொன்றன்று, உபாய பரிக்ரஹம் பண்ணினவருடைய ஸ்வபாவத்தாலே வந்தது; ராக்ஷஸ ஜாதீயராவார் தண்ணியராய் அநதிகாரிகளாயிருக்க, அவர்களிலே யொருவனான ஸ்ரீ விபீஷணாழ்வானிறே "ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி" என்று இவர்க்கு உபதேசித்தான், அவன் பக்கல் நியதி கண்டிலோம், இவர் பக்கலிலே நியதி கண்டோம்; இத்தால் சொல்லிற்றாயிற்றென்னென்றால்; அநதிகாரியானவனுக்கு அதிகாரம் ஸம்பாதிக்க வேண்டா, அதிகாரியானவனுக்கு அநதிகாரம் ஸம்பாதிக்க வேண்டா, நின்ற நின்றநிலையிலே அதிகாரிகளா மித்தனை; ஸர்வாதிகார மென்றபடி.

2. (அவ்விடத்திலேயே.)

"திருமந்த்ரம் சொல்லும்போது ப்ரயதராய்க்கொண்டு சொல்லவேணுமோ வேண்டாவோ?" என்று ஜீயர் பட்டரைக் கேட்க, "வேண்டா" என்றருளிச் செய்தார். "கங்கையாடப் போமவனுக்கு நடுவேயொரு உவர்க்குழியிலே முழுகிப்போக வேணுமோ? இந்நன்மை யெல்லாமுண்டாக்கப் புகுகிறது, கீழ் அயோக்யதை யித்தனையும் போக்கமாட்டாதோ?" என்றருளிச் செய்தார்.

### 1 - 1 - 2. ஆவியே யமுதே.

(என நினைந்து) "இப்புடைகளில் நினைப்பது அநேகத்தையிறே" என்றாயிற்று ஜீயர் அருளிச்செய்வது. பிள்ளை 'இங்ஙன் நினைந்து வாய் விடமாட்டாதே* நினை தொறும் சொல்லும் தொறும் நெஞ்சிடிந்துகும் என்று இங்ஙனே சொல்லலாமோ" என்று ஜீயர்க்கு விண்ணப்பம் செய்ய, "நீர் இவரிலும் பக்தராயிருந்தீர்" என்றருளிச் செய்தார்.

(விவரணம்) விஷயாந்தரங்களி லீடுபட்டவன் தானுகந்த காதலிமார்களை ஆவியே யென்றும் அமுதேயென்றும் நினைத்துக்கொண்டு உருகி = என்பதாக நஞ்

சீயர் கொண்ட பொருள். மூலத்தில் (என) என்பதற்கு (என்று) என்று பொருள் கொண்டபடி. நம்பிள்ளை திருவுள்ளம்பற்றின பொருளோ வென்னில்; என—என்று சொல்ல, நினைந்து—எண்ணினவாறே; உருகி—அதையும் வாய்விட்டுச் சொல்லமாட்டாமல் உடை குலைப்பட்டு, என்பதாக.

## 1-1-8. கற்றிலேன் கலைகள்.

"ஒருவனுக்கு பகவத் ஸம்பந்தமுண்டு இல்லை என்று தனக்கே அறியலாம்" என்று பலகாலும் அருளிச் செய்வர் ஜீயர். ஒருவன் நோவுபடக் கண்டால் "ஐயோ!" என்று இரக்கம் பிறந்திருக்கில், "நமக்கு பகவத் ஸம்பந்த முண்டு" என்றறியலாம்; "அத்தனையும் வேணும்" என்றிருந்தானாகில், "நமக்கு பகவத் ஸம்பந்தமில்லை" என்றிருக்கலாம்.

## 1-1-9. குலந்தரும் செல்வம் தந்திடும்.

கோவிந்தஸ்வாமி, தன்னைக் கண்டவனந்தரம் "நான் கூடப் போருவேன்" என்ன; அவனுடைய முன்புத்தை நினைவையறிந்து, "நீ யிங்கேயிருந்து சிறிது நாளநுபவித்து வா" என்று போனானிறே.

(மேலே 5-8-5 - *மாகமா நிலம் முழுதும் வந்திறைஞ்சு மென்ற பாட்டிலே இது விசதம்.)

## 1-2-6. பணங்க ளாயிரமுடைய.

"திருவநந்தாழ்வான் மடியிலும், திருவடி சிறகின்கீழும், ஸ்ரீஸேநாபதியாழ்வான் பிரம்பினுள்ளுங்காண் இத்தத்வம் வளருவது" என்று பட்டர் அருளிச் செய்யும் வார்த்தை.

(இதனால் எம்பெருமானுடைய பாரதந்த்ர்யருசி விளக்கப்பட்டதாம்.)

## 1-2-10. கரிய மாமுகில்.

(வரையெனப் பெயர்தரு) அம்மலைப் பாம்புகளானவை அவற்றுக்கஞ்சி மலைபோலே பேர்ந்துபோய் புற்றிலே புகாநிற்கு மென்று; "காருடைய மின்னென்று புற்றடையும்" என்றும், "பரந்த தலையுடைய நாகம் வாரணத்தை யஞ்சி யொளிக்கும்" என்கிற ப்ரஸித்தியாலும், இப்படி "புற்றிலே யடையும்" என்றருளிச் செய்வர் ஜீயர். "இதுவோ இதுக்கருளிச் செய்யும்படி?" என்று பிள்ளை கேட்டருள; "நீரிப்படி கேட்கும்போது ஒன்றை நினைத்தல்லது கேளீர், அத்தைச் சொல்லும்" என்ன; "பெயருகையாகிறதுதான் போக்கு வரத்து இரண்டுக்கும் ஸாதாரணமாயாயிற்றிருப்பது; இனித்தான் மலைக்குச் சிறப்புச் சொல்லுமவர்கள் 'மலைப்பாம்புகள் ஆனையை விழுங்கும்' என்னக் கடவர்கள்; ஆகையாலே, கரியமா முகில் படலங்கள் கிடந்து முழங்குகிறவற்றைப் பெரிய மாசுணமானது ஆனையாகப் புத்தி பண்ணி ஆமிஷார்த்தமாக மலைபேர்ந்தாற் போலே கால் வாங்கிவந்து கிட்டாநிற்கு மாயிற்று என்றுமே" என்ன; "அதுவேயிறே பொருள்" என்று போரக் கொண்டாடியருளினார் என்றருளிச் செய்வர்.

(விவரணம்.) சில மலைப்பாம்புகள் யானையைப் பார்த்து அஞ்சி நடுங்கி ஓடிப்போய்விடு மென்றும், பல மலைப்பாம்புகள் யானையையணுகி விழுங்கிவிடு மென்றும் தமிழ் நூல்களால் தெரிகின்றது. 'திரையன்பாட்டு' என்ற ஓர் பழைய நூலில் "கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்திமிடங் கொண்டறைதல் திண்ணமென்றஞ்சி, படங்கொள் பாம்பும் விடரகம் புகூஉம் தடங்கொள் உச்சித்தாழ்வரையடுக்கத்து" என்றதனால் மாசுணம் களிற்றைக் கண்டு அஞ்சி யொளிக்கு மென்பது தெரிகின்றது. "ஞால் வாய்க் களிறு பாந்தட் பட்டெனத், துஞ்சாத் துயரத்தஞ்சு பிடிப்பூசல், நெடுவரை விடரகத்தியம்பும்,

கடுமான் புல்லிய காடிறந்தோரே" என்று சங்கநூல்களுள் ஒன்றான நற்றிணையிலும், "பரியகளிற்றை அரவு விழுங்கி மழுங்கவிருள் கூர்ந்த, கரியமிடற்றர் செய்ய மேனிக் கயிலை மலையாரே" என்று தேவாரத்திலும் [தேவாரம்–திருக்கயிலாயம். முதல் திருமுறை இரண்டாம்பாட்டு], "இடிகொள் வேழத்தை எயிற்றொடு மெடுத்துடன் விழுங்கும் கரிய மாசுணம் கற்றறிந்தவரெனவடங்கிச், சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாமமிதித்தேறப், படிகள் தாமெனத் தாழ்வரை கிடப்பன பாராய்" என்று கம்பராமாயணத்திலும் [அயோத் – சித்திரகூடப்படலம் – 34] உள்ளபாட்டுக்களால் மாசுணம் யானையை விழுங்கும் என்பது தெரிகின்றது. அஞ்சியொளித்தல் சிறுபான்மையும், விழுங்குதல் பெரும்பான்மையுமாயிருத்தலால் "களிறென்று பெரிய மாசுணம் வரையெனப் பெயர்தரு" என்கிற இவ்விடத்திற்கு—மாசுணங்கள் மேகங்களை நோக்கி யானையாக ப்ரமித்து அவற்றை விழுங்குதற்காக மலை பெயரு மாபோலே பெயர்ந்து கிட்டவருகின்ற—என்று பொருள் கொள்ளுதல் நன்கு பொருந்து மென்க.) ... ... ... *

## 2. (அவ்விடத்திலேயே)

(அரிய இன்னிசை) "திருமங்கையாழ்வார் தம் திருவாயாலே அரியவின்னிசை என்பதே!" என்றருளிச் செய்வர்.

ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் சிலரோடே பிணங்கி, கையில் தாளத்தைப் பொகட்டு, "வாலிமாவலத்தை என்னோடே இசை சொல்லிப்போ" என்றாராம். வாது பாட்டாகப் பாடுமது என்று ப்ரஸித்தமிறே.

## 1 - 3 - 1. முற்ற மூத்து.

(அவதாரிகை) பட்டரை ஒரு வ்யாபாரி, "'இது அல்பம் அஸ்திரம்' என்று இத்தை த்யாஜ்யமாக நினைத்திரா நின்றார்கள் சிலர், 'காண்கிற வுடம்புக் கவ்வருகில்லை' என்று இதுதன்னிலே போக்யதா புத்தி பண்ணியிரா நின்றார்கள் சிலர்; ஒன்றைப் பற்றி இவையிரண்டும் நடக்கிறபடி யெங்ஙனே" என்று கேட்க, "பாக்யாதிகர்க்கு இதினுடைய தோஷதர்சனத்தைக் கொண்டு கைவிடுகைக்கு முடலாய், பாக்ய ஹீநர்க்கு இதிலே போக்யதா புத்தி பண்ணி அநர்த்தப் படுகைக்கு முடலாம்படி அவ்வவருடைய புண்யபாபங்களை யிட்டு அதுக்கநுரூபமாகக் காணுமித்தைப் பண்ணிற்று" என்றருளிச் செய்தார்.

## 2. (அவ்விடத்திலேயே)

ஜீயர் ஸந்ந்யஸித்தருளுகிறவன்று "தண்டதாரணம் பண்ணுகிற மந்த்ரம், 'நீயெனக்கு மித்ரமாய் எல்லாரக்ஷணங்களும் பண்ணவேணும்' என்றாயிற்றிருப்பது, அத்தைக் கேட்டு, 'ஒரு ஸர்வஜ்ஞன் ஸர்வசக்தி பரமசேதநனை ஓராசார்யன் முன்னாக இவ்வார்த்தை சொல்லிவைத்து, இத்தையும் இவ்வார்த்தை சொல்லும்படியான இவ்வாச்ரம ப்ராப்திதானென்' என்றிருந்தேன் காண்" என்றருளிச் செய்வர்.

[ "सखा मा गोपाय" என்பது த்ரிதண்டதாரண மந்த்ரம்.]

## 1 - 3 - 5. பண்டு காமரான வாறும்.

(ஊன்றி யூன்றி) பிள்ளையழகிய மணவாளவரையர் இதுக்கு பட்டரருளிச் செய்தாராகச் சொன்னபடி. "ஒருகால் சரீரம் ஸ்த்திதிக்க வேண்டு மளவும் ஊன்ற மாட்டானே, தன்கையில் மிடுக்கில்லாமையாலே, பலகா லித்தை யெடுத்தெடுத்து இடா நிற்கும்" என்று.

(இங்கு அரும்பதவுரை காண்க.)

## 1 - 4 - 8. மான்முனிந் தொருகால்.

(தவமித்யாதி) தவம் புரிந்துயர்ந்த மாமுனி கொணர்ந்த வென்கிறது—விச்வாமித்ரனை. அவன் க்ஷத்ரியனுயிருக்கச் செய்தேயும் தபோபலத்தாலே ப்ரஹ்மரிஷி யானானிறே. அவன் பெருமாளையும் இளைய பெருமாளையும் நடத்திக்கொண்டு வந்தது அக்கரையே யாகையாலே அத்தைச் சொல்லிற்றாகவுமாம். தபஸ்ஸைச் செய்து உயர்ந்த வென்றபடி. இதுக்கு ஸ்ரீ பராங்குசதாஸர், "ஜீயா! 'மாமுனி புகன்ற' என்று பாடபேதத்தைப் பண்ணி அதினுடைய ப்ரபாவத்தைப் பிள்ளைகளுக்குச் சொல்லிக்கொடு போந்தானிறே, அத்தைச் சொல்லிற்றாகவுமாமே" என்ன; "அது நமக்கு பலம் போராது" என்றருளிச் செய்வர்.

[விவரணம்: * தவம் புரிந்துயர்ந்த மாமுனிகொணர்ந்த கங்கை * என்பதற்கு—பகீரத முனிவனால் கொண்டுவரப்பட்ட கங்கை என்கிற பொருளொன்று உண்டு; ஆனாலும் 'தவம்புரிந்து உயர்ந்த' என்ற சொல் நலத்தைத் திருவுள்ளம் பற்றி நம்பிள்ளையருளிச் செய்யும் பொருளாவது— விச்வாமித்ரன் க்ஷத்ரியனுயிருக்கச் செய்தேயும் தவம் புரிந்து ப்ரஹ்மர்ஷித்வமாகிற உயர்த்தி பெற்றனனாதலால் தவம்ரிபுந்துயர்ந்த மாமுனி யென்று அவனைச சொல்லுகிறது. அவன் கொணர்ந்த கங்கை யென்றது—ஸ்ரீராமலக்ஷ்மணர்களைத் தன்னுடைய யஜ்ஞரக்ஷணார்த்தமாக அழைத்துக்கொண்டு போனபோது கங்கையின் வரலாறுகளைச் சொல்லிக்கொண்டே கங்கைக் கரைமேல் அழைத்துக் கொண்டு போயினனாதலால்; தவம்புரிந்துயர்ந்த விச்வாமித்ர முனிவனால் (ஸ்ரீராம லக்ஷ்மணர்களைத்) தன்கரைமீது கொண்டுவரப் பெற்ற கங்கை—என்றதாயிற்று. இங்ஙனேபொருள் கொள்வது அரியவழி யென்றெண்ணின ஸ்ரீபராங்குசதாஸ ரென்பவர் "மாமுனி புகன்ற கங்கையின்கரைமேல் என்று பாடத்தை மாற்றிக்கொண்டால் நன்றாகுமே" என்றாராம்; அதை நம்பிள்ளை கேட்டருளி "உள்ள பாடத்திற்கு நாம் பொருளுரைக்கக் கடமைப்பட்டிருக்கிறோமே யன்றி இல்லாததொரு பாடத்தைக் கற்பிக்கவல்லோமல்லோம்" என்றருளிச் செய்தாராம்.

## 1 - 4 - 10. வருந்திரை மணிநீர்.

"அறிவுடையார் அபுருஷார்த்தமென்று காற்கடைக் கொண்ட ஐச்வர்யத்தை 'வேண்டேன் மனைவாழ்க்கையை' என்றும் 'போந்தேன்' என்றும் வீதராகராய்ப் போந்த விவர், இப்போது ஐச்வர்யத்தைப் பலமாகச் சொல்லுவானென்?" என்று ஜீயர் பட்டரைக் கேட்க, "திருமங்கையாழ்வா ரவதரித்த பின்பு, த்யாஜ்யமான ஐச்வர்யமும் பரமபுருஷார்த்தத்துக் குள்ளே புக்குப் போயிற்றுக் காணும்; 'ஈச்வரனே யாகவுமாம், நித்ய ஸூரிகளே யாகவுமாம், ராஜாவாகவுமாம், பறித்து பாகவத சேஷமாக்கலாமாகில்' என்றுமிவரிருப்பது" என்றருளிச் செய்தாராம்.

## 1 - 9 - 2. மானேய் கண்மடவார்.

ஸ்ரீ ராமாயணத்திலே கைகேயியை "நீ யென்ன நரகத்திலே புகக் கடவை" என்றுண்டு; அவ்விடத்தை வாசியா நிற்க, நம்பிள்ளை, "முன்பே ஸ்ருஷ்டமான நரகங்கள் போரா தென்கிறதோ" என்ன; "அழகிதாகச் சொல்லிற்று" என்று ஜீயரருளிச் செய்தார்.

## 2 - 4 - 1. தையலாள் மேல்.

திரியட்டும் ராமாவதாரம் அநுவர்த்தித்தபடி; பட்டரோபாதியும் போருமாய்த் திவர்க்கு அவ்வவதாரத்தில் பக்ஷபாதம்.

சிறியாத்தான், பட்டர் ராமாவதாரத்திலே பக்ஷபதித் திருப்பரென்று அருளிச் செய்யும் வார்த்தை கேட்கைக்காகப் "பெருமாளுக்கு எல்லாவேற்றமு முண்டாகிலும்

ஆச்ரிதார்த்தமாகக் கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோன இவ்வேற்ற மில்லையே" என்ன "அவர் போகாமையல்ல, பிறப்பில் குற்றங்காணும்" என்றருளிச் செய்தார்.

இக்ஷ்வாகு வம்சயர்கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோகவிடுவாரைக் கிடையாதே; அவ்வவதாரத்திலே திருவடி அங்கே போவது இங்கேவருவதாய்க் கொண்டு வார்த்தை சொல்லித்திரிந்த ஏற்றத்தைக் கண்டு நாமுமிப்படி ஆச்ரிதர்க்காகத் தூது போகப் பெற்றிலோமென்று செவி சீபாய்ந்திருந்தது; அதுக்காகவிறே பின்னை வநதவதரித்து ஆச்ரிதர்க்காகத் தூது போய்த்தது. க்ஷத்ரிய னென்று நிச்சயிக்கில் தூது போகவிடு வாரில்லை யென்று அத்தை மறைத்திறே வளர்ந்தது, அபிஷிக்த க்ஷத்ரியவம்சத்தில் பிறக்கில் தூது போகவிடுவாரைக் கிடையாதே.

## 2 - 3 - 6. அந்தகன் சிறுவன்.

"ஆண்பிள்ளைகளான பர்த்தாக்கள் ஸந்நிஹிதராயிருக்க தூரஸ்த்தனான க்ருஷ்ணன் பேரைச் சொல்லுவானென்" என்று எம்பாரைக் கேட்க, அறிந்தோமே! முன்பே சில ஸாருஸாரு கேட்டு வைத்தாள்போலே காணும் * மஹத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ பகவாந் ஹரி: * என்று. இது தன்னை பட்டரைக்கேட்க, "பர்த்தாவின கையைப் பிடித்துப் போகா நின்றாலும் இடறினால் அம்மே! என்னக் கடவதுகாண்" என்றருளிச் செய்தார். அதாயிருக்கச் செய்தே விசைப்புக் கிடந்தபடி காணும்.

## 2 - 4 - 6. பாராருலகும்.

(அலையித்யாதி) இவ்விடத்துக்குப் பொருள் அழகப் பெருமாளரையர் பலரையுங் கேட்டுக் கொடு திரிந்தாராய், நம்முடையவர்களிலே சிலர் "ஸர்வேச்வரனைச் சொல்லுகிறது காணும்" என்று விட்டார்கள்.

[விவரணம்: மூலத்தில் "அலை நீருலகுக்கு அரசாகிய அப்பேரானை முனிந்த" என்றிருக்கிறது. அப்பேரான் என்பது யாரைக் குறிக்கிறதென்று கேள்வி. பரசுராமன் தசரதராமனை முனிந்துவந்தவனாகையாலே பெருமாளைக் குறிக்கிறதென்று சிலர் மேலெழச் சொல்லிவிட்டார்களாம். இங்கு ஸ்ரீராமனுடைய ப்ரஸ்தாவமில்லை. பொதுவாக க்ஷத்ரியர்களின் ப்ரஸ்தாவமே யுள்ளதென்று ஆசாரியர்களின் திருவுள்ளம். 'அப்பேரானை' என்று பாடமிராமல் (அப்பேரான) என்று பாடம் பெரியவாச்சான் பிள்ளை கொண்டதாகச் சில பெரியார் கூறுவர்.

## 2 - 5 - 3. உடம்புருவில் மூன்றொன்றாய்.

(வரையித்யாதி) இவ்விடத்துக்கு பட்டரருளிச் செய்தாரென்று ப்ரஸித்தமிறே. இவ்விடத்துக்கு ஜீயரருளிச் செய்யா நிற்க, பிள்ளை அழகிய மாணவாளப் பெருமாளரையர் ஸ்மரிப்பித்தருளின வார்த்தை யாயிற்று; "மலைமேல் காட்டிலே யுண்டான தடாகங்களிலே கன்றுகள்பின்னேபோயிளைத்து வந்து தண்ணீர் குடிக்கப் புக்கால் இளங் கன்றுகளாகையாலே நீரிலே முன்னே யிறங்கிக்குடிக்க பயப்படுமே, அத்தை நீடேட்டுகைக்குத் தான் பின்னே கையைக் கட்டிக் கவிழ்ந்து நின்று தண்ணீரமுது செய்யுமாயிற்று." ஜாதிப்ரயுக்தமான ஸ்வபாவத்தைச் சொன்னபடி.

## 2 - 5 - 8. பெண்ணாகி யின்னமுதம்.

ஸர்வேச்வரனாகிறான்—தன்னை ஆச்ரயித்தார்க்குத் தன்னோடொத்த வரிசையைக் கொடுப்பவ னொருவனென்று கொண்டு அவனுடைய நீர்மையைச் சொல்லுகைக்காக, அல்லாதார்க்கு உத்கர்ஷத்தைச் சொல்லா நிற்கும் ப்ரமாணங்கள்; அவர்கள் தாங்களும் புழுக்குறித்த தெழுத்தாமா போலே சிலவற்றைத் தோற்றச் செய்யும்; அவற்றைக் கண்டு இவர்கள் பக்கலிலேயும் குவாலுண்டு என்று நாட்டார் ப்ரமிக்கைக்கு உடலாயிருக்கும்; ஆக, ப்ரமாணகதி யிருந்தபடியாலும், சேதநர் மந்தமதிகளா யிருந்தபடியா

லும், இவற்றின் தாத்பர்யமறியாதே * ஸம்ஸார ஸாகரம் * என்று சொல்லுகிற கடலிலே புக்குப் போமித்தனையிறே அவற்றை யநுஸந்தித்துச் சொன்ன இவ்வாழ்வார்களீரச் சொல்லின்றாகில்" என்று பட்டரருளிச் செய்தார்.

## 2 - 6 - 1. நண்ணாதவாளவுணரிடை.

(நண்ணாத) ஸ்ரீவிதுரர் பட்டது படுகிறாராய்த்து நடுவேயிவர். * ஸம்ஸ்ப்ருசந் ஆஸநம் சௌரேர் மஹாமதிருபாவிசத் * என்றதிறே. கடல் கடங்கினாப்போலே கலங் கும்போலே காணும் மஹாமதிகளென்று. துர்யோதநக்ருஹத்திலே எழுந்தருளின போது பொய்யாஸனமும் வஞ்சனமுமாய்ப் புகுந்த ப்ரமாதத்தை நினைத்தஞ்சினபடி யாலே 'நாமும் ஒருகுலையில் காயன்றோ? நாமும் ஸம்ஸாரிகளிலே யொருவரான பின்பு நம்மைத்தான் விச்வஸிக்க வொண்ணுமோ?' என்று தம்மை அதிசங்கைபண்ணின படியாலே தாம் படுத்த படுக்கையையும் தடவிப்பார்த்தாரிறே. பிள்ளை யுறங்காவில்லி தாஸர் பெருமாளெழுந்தருளப் புக்கால் சொட்டை முட்டியிலே கையைவைத்துக் கொடு ஸேவிப்பராம், ஒருவரிடறுதல் போதல் செய்ததாகில் தம்மை முடித்துக் கொள்வாராக. அத்தையநுஸந்தித்து நம்முதலிகள் இவரை மஹாமதிக ளென்றுமழைப்பது. கலங் குகை போலேகாணும் மஹாமதிகளாவது, அஸ்தாநே பய சங்கை பணணுவார்க்கெல் லாம் பேராய்க் கொள்ளீர் மஹாமதிகளென்று.

"கிழக்கே ஐயாற்றிலே யாதவராயர் வந்திருக்க, ஜீயர் என்னை இறையிலிக் காரி யத்துக்காக அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களோடே கூடப் போகவிட்டார், நானவன் கூடத் திலே வந்து அவஸரம் பார்த்திருக்கச் செய்தே பலரும் வந்தென்னை யநுவர்த்திக்கக் கண்டவாறே, அங்கே மஹாமஹேச்வரனா யிருப்பா னொருபையல், 'பிள்ளாய்! நீர் பொருளுக்குக் கடவீர் என்று கேட்டோம், எங்களுடையவற்றிலே 'அரியல்லால் தேவி யில்லை' என்றுண்டாயிருந்தது, அதுக்குப் பொருள் சொல்லவேணும்' என்ன; 'நானி துக்கு அதிகரித்தே னொருவனல்லேன்' என்ன, 'ஆகிலும் எல்லாந் தெரிதிராதோ உமக்கு?' என்ன, 'நீதான் தேவர்க்கொரு உத்கர்ஷத்தையும் ஈச்வரனுக்கொரு அபகர் ஷத்தையும் நினைத்துக் கேட்கிறாயாகில் புருஷோத்தமனென்று புராணங்களில் சொல் லாநிற்க, ஆச்ரிதார்த்தமாக அவன் தன்னை அழிய மாறினா னென்றால் இது அவனுக்கு குணயவா மித்தனையல்லது தோஷாய வாகாது. இனி ஆண்பிள்ளைச் சோறுள்வியை ஸ்த்ரீ என்று தொடர்ந்து திரிவாரைப்போலே தொடர்ந்து திரியா நின்றார் என்று தேவரை அஜ்ஞராக்குவதிற் காட்டில் இது சொன்னவன் அநாப்தன் அஜ்ஞன் என்றி ருக்க வமையாதோ?' என்று சொன்னேன்" என்றருளிச் செய்தார்.

## 2 - 6 - 4. விண்டாரை வென்றாவி.

"பெருமாள் * ந த்யஜேயம் கதஞ்சந * * ஏதத் வ்ரதம் மம * என்று நின்றார்; மஹாராஜர் * வத்யதாம் * என்றே நின்றார்" என்று இவ்விடத்துக்கு பட்டரருளிச் செய்யும்படி.

## 2 - 6 - 6. புலன்கொள் நிதிக்குவையோடு.

(வலங்கொள் மனத்தாரவரை) "பிள்ளை திருநறையூரரையரும் பட்டருமாக ப்ரதக்ஷிணம் பண்ணும்போது நான் பின்னே போனேன்; நம்மைப்போலே தேவைக் குப் பரகுபரகென்று வருகை யன்றிக்கே திருமாளிகைகளையும் திருக்கோபுரங்களையும் கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்துக் கொடுபோகும்படிகாண்" என்று நஞ்சீயர ருளிச் செய்வர்.

## 2 - 7 - 2 துளம் படு முறுவல்.

"துளம் என்று பீலிக்காம்பைச் சொல்லுகிறது' என்று ஒருதமிழன் சொன்னா னாக ஜீயரருளிச் செய்வர்" என்றருளிச் செய்வர்.

(அவ்விடத்திலேயே) (இளம்படி யிவளுக்கு) பட்டரருளிச் செய்தாராக ப்ரஸித்தமிறே, "உண்ணவும் பொறுதே பட்டினி விடவும் பொறுதேயிருக்கும் ஸுகுமாரரைப் போலே, அதிகமான ஸம்ச்லேஷ விச்லேஷம் பொறுக்கமாட்டாதபடியான திருமங்கையாழ்வார் மார்த்தவமிருக்கும்படி" என்று.

## 2 - 7 - 6. தன்குடிக்கேதும்.

நம்குடி என்னுதே 'தன்குடி' என்கிறுளாயிற்று "எம்பெருமானுர் தர்சநம்" என்னுமாபோலே. நம் ப்ரதிபத்தியாலே சொன்னோமாகை யன்றிக்கே பெருமாள் "இராமாநுசனுடையார்" என்றே யருளிச்செய்வர். "பெருவிலையனை ரத்நத்தை நடுவே இட்டுக் கோத்தால் முன்னும் பின்னு மொக்கவிலை போமாபோலே காண்" என்று பிள்ளான்.

(அவ்விடத்திலேயே) ஒரு நாள் பட்டர் இனிதாக வாசித்த படியைக் கேட்டருளி எம்பாரெழுந்திருந்து நின்று கண்ணநீரை விழவிட்டு சிதிலாந்தஃகரணராய் பட்டரைக் காட்டி, "ஜநகாநாம் குலே கீர்த்தி மாஹரிஷ்யதி மே ஸுதா" என்றருளிச் செய்தாராம்.

## 3 - 4 - 10. செங்கமலத்தயனனைய.

பெருமாளுக்கு வல்லபனுயிருப்பானொரு திருவிளக்குப் பிச்சன் பலரையும் திருமுன்பே க்ஷேபிக்கிற ப்ரகரணத்திலே, ஆழ்வார்களைத் திருவுள்ளமாய், "நம் பக்தர்களுக்கொருகுறை சொல்லிக்காணுய்" என்று திருவுள்ளமானுராய்; இப்பாட்டை விண்ணப்பஞ்செய்து; "நாயன்தே! 'தேவரீரைக் கவிபாட வென்று தொடங்கி தம்மைக் கவிபாடிக் கொண்டார்" என்ன; "அதுவும் நம்மையன்ருே சொல்லிற்று" என்று திருவுள்ளமானுர்.

## 3 - 6 - தூவிரிய மலருழக்கி - ப்ரவேசம்.

நஞ்சீயருடைய நோவிலே பெற்றி அறியப்புகுந்து, "இங்குத்தைக்கு வேண்டியிருக்கிறதென்?" என்று கேட்க, "தூவிரிய மலருழக்கிப் பாட்டுக் கேட்கவும், பெருமாளெழுந்தருளப் பின்னும் முன்னும் சுற்றும் வந்து திருவடித் தொழவும் வேண்டியிரா நின்றேன்" என்றருளிச் செய்தருளினுர்; அப்போதே வரந்தரும் பெருமாளரையரை யழைத்துவிட்டுப் பாட்டுக் கேட்டருளாநிற்க, "ஓர் மீனுயகொடி நெடுவேள் வலிசெய்ய மெலிவேனே" என்னுமளவிலே வந்தவாறே, "காமசரங்களாலே ஏவுண்பதற்கு முன்பே வாராவிட்டால் பட்டபுண் பரிஹரிக்க வாகிலும் வந்தாலாகாதோ!" என்றருளிச் செய்தருளினுர்.

## 3 - 6 - 1. [தூவிரிய]

(துணையோடும்) சிறியாத்தான், "துணையென்ருல் த்விநிஷ்ட்ட மன்று காண், ஏகாச்ரயத்திலே கிடக்கும்" என்னுமாம்.

3-6-4. 'தானுக நினையானேல்' - ஜீயர் வார்த்தையை நினைப்பது.
[விவரணம்: ஜீயர்வார்த்தை இன்னதென்பது இத்திருமொழியின் ப்ரவேசத்திலே காணத்தக்கது.]

## 3 - 6 - 9. நிலையாளா நின்வணங்க.

அம்மங்கியம்மாளுடைய சரமதசையிலே நஞ்சீயரறிய வெழுந்தருளினவர், அவர் படுகிற க்லேசங்களைக் கண்டு "இங்குத்தை ஆசார்யஸேவைகளும் பகவத் குணங்களைக் கொண்டு போதுபோக்கின படிகளுமெல்லாங் கிடக்க அல்லாதாரைப்போலே இப்படி படவேண்டுவதே!" என்ன, "நீயாளவளையாள மாட்டோமே" என்றன்ருே. பகவத்

பரிக்ரஹமானல் க்லேசப்பட்டே போமித்தனை காணும்" என்றார். புறப்பட்ட பின்பு, நஞ்சீயர் பிள்ளையைப் பார்த்து, "மூடிகிற விவ்வளவிலேயும் இவ்வார்த்தை சொல்லுகிறது விச்வாஸத்தின் கனமான பாவபநதத்தி லூற்றமிறே" எனறருளிச் செய்தார்.

### 3 - 6 - 10. மையிலங்கு கருங்குவளை.

(கையிலங்கு) பட்டர், "ஸர்வேச்வரன் திருமங்கையாழ்வார்க்குப் பக்கக்குதிரையேறிப்போமாகாதே! அவன் கையில் திருவாழி அழகுக்குடலாக ஒப்பித்திருக்கு மத்தனை, இவர் கையில் வேல் சத்ருநிரஸநத்தாலே கறைகழுவ அவஸரமின்றிக்கே யிருக்குமாயிற்று" என்றருளிச்செய்வர்.

### 3 - 7. கள்வன்கொல் யானறியேன்—ப்ரவேசம்.

ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே வர்த்தித்த வைஷ்ணவன் அந்திமஸமயத்தில் பட்ட க்லேசத்தைக் கண்டு பெரியநம்பிக்கு மெம்பெருமானார்க்கும் நடந்த ஸம்வாதத்தை நினைப்பது.

['ஸம்வாதத்தை' என்றவிடத்தில் 'ஸம்மோஹத்தை' என்று பாடாந்தரம் காண்பதாகத் தெலுங்குலிபி வியாக்கியானத்தில் அச்சிடப்பட்டுள்ளது.]

### 3 - 7- 1. கள்வன்கொல் யானறியேன்.

(கரியானித்யாதி) பிள்ளையமுதனார், "கூடுகிடக்க வாளையுருவிக்கொடு போவாரைப்போலே, தாயாரணைத்துக்கொடு கிடக்கக் கொண்டுபோனான்" என்று நிர்வஹித்தார்; அத்தை பட்டர் கேட்டருளி, "அத்தனை பணிப்பட வேண்டாகாண், சில கள்ளர் விளக்குக்களையும் பிடித்து, 'பிள்ளை, பிள்ளை' என்கிற வளவிலே கொண்டுபோமா போலே கொண்டுபோனான்காண்" என்றருளிச்செய்தார்.

### 3 - 7 - 3. 'அஞ்சுவன் வெஞ்சொல் நங்காய்.

பட்டர் இப்பாட்டை யருளிச்செய்து, "ஒருஸ்த்ரீயை விரூபையாக்கினவனுடைய திறம்கேட்கில் அஞ்சுவன் என்கையால், இத்தலைக்கு குணஹாநியாய்த் தோற்றாநின்றது; இது ஆழ்வாரருளிச் செய்யக்கூடாது, இதெங்ஙனே சேரும்படி?" என்று ஆச்சானைக் கேட்க, "துடுப்பிருக்கக் கை வேகவேணுமோ, எம்பெருமானார் தாமே யருளிச் செய்து வைத்தாரிறே" என்ன, "அருளிச்செய்தபடி யெங்ஙனே" என்று கேட்க; "முன்பொரு புணர்ந்துடன் போக்கிலே பிறந்த ப்ரமாதத்தைக் கேட்டு அத்தை நினைத்து இப்போது பயப்படுகிறாள்" என்றருளிச்செய்தார்.

[விவரணம். சூர்ப்பணகையின் அங்கபங்கஞ் செய்தவரலாற்றைச் சொல்லி 'இப்படிப்பட்ட தன்மையைக் கேட்க நான் அஞ்சுகிறேன்' என்று பரகாலநாயகி சொல்லியிருப்பதன் கருத்து யாது? அரக்கியின் மூக்கை யறுத்தது போலே என்மகளின் மூக்கையும் அறுத்துவிடுவனோவென்று அஞ்சுகிறேனென்பதாகவன்றோ மேலெழ நோக்குமிடத்துக் கருத்துத் தோற்றுகின்றது; குணக்கடலாகிய எம்பெருமான் விஷயத்திலே இவ்வாறு நினைத்து அஞ்சுதல் கூடுமோ? இது குணஹாநி சொல்லுகிறபடியாகுமன்றோ? என்று பட்டர் ஆச்சானைக் கேட்டார். அதற்கு அவர் "துடுப்பு இருக்கக் கை வேகவேணுமோ? எம்பெருமானார் இனிதாக நிர்வஹித்துப் பொருளருளிச் செய்து வைத்திருக்க நாம் ஏன் வருந்தவேண்டும்?" என்று சொல்லி அப்பொருளையும் வெளியிட்டார். அதாவது, 'அரக்கர் குலப்பாவை தன்னை மூக்கரிந்த விறலோன்' என்றதனால் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் நேர்ந்த பிரிவு தெரிவிக்கப்படுகிறது. இராவணன் ஸீதையைக் கவர்ந்து சென்றதற்கு மூலகாரணம் சூர்ப்பணகா பங்கமே யாதலால் இந்த பங்கத்தைச் சொல்லுகிற முகத்தால் ஸ்ரீராமஸீதைகளின் பிரிவுதான் நினைவுக்கு வரக்கூடியது,

ஆகவே, முன்பு இருவருமாய்ப் புறப்பட்டுச் சென்று ஒருவரை யொருவர் பிரிந்து பல நாள் வருந்திக்கிடக்க நேர்ந்ததே; அவ்விதமாக இப்போதும் இவர்களுக்கு ஏதேனும் விதிவசத்தாலே பிரிவு நேர்தது பரிதபிக்க ப்ராப்தமாகுமோ வென்று அஞ்சுகிறே னென்பதாம். அப்போது அரக்கியை அங்கபங்கம் செய்து அபாயத்தை விளைத்துக் கொண்டதுபோல இப்போதும் யாருக்காவது பங்கம் செய்து அபாயத்தை விளைத்துக் கொள்வனே என்று அஞ்சுகிறபடி.

## 3 - 8 - 1. நந்தா விளக்கே.

(அளத்தற் கரியாய்) "'ஸத்யம் ஜ்ஞாந மநந்தம் ப்ரஹ்ம' என்கிறார் காண்" என்று ஆழ்வான் பணிக்கும்.

## 3 - 8 - 6. பண்ணேர் மொழி யாச்சியரஞ்ச.

(வைகு நாங்கூர்) இவ்விடத்தைப் பிள்ளை விழுப்பரையரும் ஆப்பானுங்கூட அநுஸந்தித்து, "இரண்டிடத்திலே 'வைகு' என்றுண்டாயிருந்தது, இது செய்யும்படி யென்?" என்று பட்டரைக் கேட்க, "ஸௌகுமார்யத்தாலே இரண்டிடத்திலும் கிடந்தது" என்றருளிச்செய்தார்.

[விவரணம். இப்பாசுரத்தில் மூன்றுமடியில் ஒரு முறை 'வைகி' என்று வந்திருக்கிறது; நான்காமடியிலும் 'வைகு' என்று வந்திருக்கிறது; ஆவ்ருத்திக்குப் பொருளென்? என்று சங்கை. ஸமாதானம்: அவ்விடத்து எருமைகளின் ஸௌகுமார்யம் விளக்கப்பட்டதாகிறது; முரட்டெருமைகளாயிருந்தால் பதறிப் பதறி நடக்கும்; ஸுகுமாரமான எருமைகளாகையாலே வைகி வைகிக் கிடக்கிறபடி என்று. எருமைகளின் அலஸகதியை நன்றாகச் சொல்லிற்று என்பது தேர்ந்த பொருள்.

## 3 - 8 - 10. வண்டார் பொழில் சூழ்ந்து.

"ஐச்வர்யத்தைப் புருஷார்த்தமாகச் சொல்லுவானென்?". என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்க; "ஈச்வரனே யாகிலும் ஒருகால் பிறந்து அபிஷேகம் பண்ணவமையும் பாகவத சேஷமாக்கலாமாகில் என்று காணும் திருமங்கையாழ்வாரிருப்பது" என்றருளிச்செய்தருளினர்.

## 4 - 4 - 6. தான்போலு மென்றெழுந்தான்.

ஆப்பான் திருவழுந்தூரரையரும் மற்றுமுள்ள முதலிகளுமாக "'இப்பாட்டிற் சொல்லுகிறதென்?" என்று பட்டருக்கு விண்ணப்பம்செய்ய; ஒருகால் இயலைக் கேளா "ராவணன்வார்த்தை காண்" என்றருளிச்செய்தார்.

[விவரணம்.] இப்பாட்டின் முன்னடிகட்குப் பொருள் சொல்லுவது ஸூக்ஷ்ம புத்திசாலிகளுக்கன்றி மற்றையோர்க்கு இயலாது. பட்டர் அருளிச் செயல்மூலம் சந்தை சொல்லிப்பயிலாத நாளிலும் அவரிடம் சென்று இதற்குப்பொருள் கேட்டார்களாம். அப்போதே பட்டர் 'பாசுரத்தை விளங்கச் சொல்லுங்கள்' என்று சொல்லி ஒருகால் பாசுரத்தைக் கேட்டவாறே 'தான் போலு மென்றெழுந்தான் தரணியாளன் அதுகண்டு தரித்திருப்பானரக்கர் தங்கள் கோன்போலும்' என்கிறவரையில் இராவணனது வார்த்தையின் அநுவாதம் என்று சொல்லிப் பொருளை விளக்கிக் காட்டினர். (அதாவது) திருத்தெற்றியம்பலத் தெம்பெருமான் யாவனென்னில், இராவணனுடைய மலை போன்ற இருபது தோள்களையும் துணித்த தனிவீரன்; அந்த ராவணன் எப்படிப்பட்டவனென்னில், மிகவும் அஹங்காரம் தோற்றச் செருக்கி வார்த்தை சொல்லிக் கொண்டே போர்க்களத்தில் கிளர்ந்தவன். அப்படி அவன் செருக்குடன் சொன்னவார்த்தை ஏதென்னில்

'தான்போலும் மென்றெழுந்தான் தரணியாளன் அது கண்டு, தரித்திருப்பானரக்கர் தங்கள் கோன்போலும்' என்னுமிவ்வார்த்தையாம். இவ்வார்த்தையின் பொருளாவது— இராமனென்று ஒரு பயல் தான் பெரிய வொரு க்ஷத்ரியன் போல எதிரியென்று வருகிறதாம்; அதைக்கண்டு ஒருவன் பொறுத்திருக்கிறதாம்; அப்படி பொறுத்திருக்கிறவன் ராக்ஷஸராஜ னென்று பெயர் சுமந்திருப்பதாம்—என்று வெகு அற்பமாகச் சொல்லி யுத்தத்திற்குக் கிளம்பினு னென்கை. இதனால், இராமன் (ராவணனுகிய) தனக்கு எதிரி யென்று புறப்படுவதற்கும் தகுதியற்றவன் என்பதும், இராமன் போர்க்கு வரச் செய்தேயும் தான் ஆறியிருப்பது தன் பெருமைக்குத் தகாதென்பதும் தெரிவிக்கப்பட்டன வாம். (இப்பாட்டின் இவ்வரிய பெரிய பொருளை உணராதவர்கள் பிறரும் உணர்ந்து கொள்ள இடமில்லாதபடி "தான் போலு மேன்றெழுந்தான்" என்றும் "கோன் பொலு மேன்றெழுந்தான்" என்றும் பாடத்தையே மாறுபடுத்திப் பதிப்பித்தும் ஓதுவித்தும் ஓதியும் வருவது வருந்தத்தக்கது.)

## 4-5-3. மாத்தொழில் மடங்க.

"'வ்ருத்தவானுய்ப் போந்தவன் வ்ருத்த ஹீநனுனுன்' என்னுமாபோலே, தீத்தொழில் என்ற த்வநிவிசேஷத்தைப்பற்றச் சொன்ன வார்த்தை" என்றருளிச் செய்தார்.

[* நாத் தொழில் மறைவல்லார்கள் நயந்து அறம் பயந்த * என்ற மூன்றுமடியினுல் ஞானமனுட்டான மிவை நிறைந் தவைதிகர்கள் வாழுமிடம் திருநாங்கூர் என்றது. உடனே தீத்தொழில்பயிலும் என்றது விரோதாபாஸாலங்காரம். தீத்தொழில் என்பதற்கு, தீயதொழில் [கெட்டகாரியம்] என்றும் பொருளாகுமாதலால் அதனை முந்துற விரோதப் பொருளாகக் கொள்க. வேதமோதித் தருமங்களை யனுட்டிப்பவர்கள் தீய தொழிலைப்பயில்கின்றன ரென்பது விரோதம். ஔபாஸநம் முதலிய அக்நிகாரியங்களை நடத்துபவர்கள் என்று பொருள்கொண்டு விரோதத்தை யகற்றுக. ஆகவே விரோதாபாஸாலங்காரம் இது என்றவாறு.

## 4-9-9. எந்தை தந்தைதம்மானென் றென்று.

(சிந்தைதன்னுள் முந்தி நிற்றிர்) "அணைக்கைக் கீடாகக் கைக் கெட்டாதேயிருக்கிற நீர் இத்தைப் போர வளர்க்கிற தென்?" என்று பிள்ளான்.

## 4-10-8. முடியுடை யமரர்க்கு.

(மடியிடைவைத்து) "'தன்னுடைய தாள்மேல் கிடாத்தி' என்கிற விடத்துக்கு பட்டரருளிச் செய்ய நான்கேட்டேன்" என்று பிள்ளையருளிச் செய்வர்; "ப்ரதிகூலனை ஹிரண்யனை விட்டு, ஆசையுடைய வென்னையன்றோ அம்மடியிலே ஏறிட்டுக் கொள்ளவடுப்பது" என்று தம்மைப் பார்த்தருளிச் செய்தாராக.

## 5-1-2. 'கள்ளக்குறளாய்'

(புள்ளுப் பிள்ளைக் கிரைதேடும்) "ஆலவாயுடையான் கேட்க, பட்டர் அருளிச் செய்தார்" என்று நாம் ப்ரஸித்தமாகச் சொல்லிப் போருமதிறே; —"கயலுகளா நின்றதாகில் புள்ளுக்குத் தேடிப்போக வேண்டுகிறதென்?" என்ன; "பிள்ளை, அவ்விடமறிந்த தில்லையோ; பிள்ளைக்கன்றோ தேடுகிறது, நிலமிதியாலே அவைதான் தூணும் துலாமும்போலே வளர்ந்திருக்கும்; அதிலிதுக்கு ஸாத்மிக்குமவை தேடிப் போகா நிற்கும்."

[விவரணம்; இப்பாட்டின் பின்னடிகள்—"பள்ளச் செறுவில் கயலுகளப் பழனக்கழனி யதனுட்போய், புள்ளுப் பிள்ளைக்கிரை தேடும் புள்ளம் பூதங்குடிதானே" என்றுள்ளன. ஆலவாயுடையா னென்பானெருரு தமிழன் பட்டரிடம் வந்து இதில் ஒரு கேள்வி கேட்டான். 'பள்ளச் செறுவில் கயலுகள' எனறபோதே அவ்விடத்து வயல்

களில் மீன்கள் அளவற்றுக் கிட க்கின்றமை வெளிவந்துவிட்டது; அப்படியிருக்க ஈற்றடியில் 'புள்ளுப் பிள்ளைக்கு இரைதேடும்' என்று எங்ஙனே சொல்லலாம்? மீன் அருமைப்பட்டிருந்தாலன்றோ இரைதேட வேண்டும்; கொள்வார் தேட்டமாம்படி குறையற்றுக் கிடக்கும்போது தேடிப்பிடிப்பதாகச்சொல்லுவது பொருந்தாதன்றோ—என்று கேட்டான். இதற்கு பட்டர் அருளிச்செய்ததாவது, பிள்ளாய்! நீ கற்றவனுயினும் சொற்போக்கு அறிந்திலை; 'பிள்ளைக்கு இரைதேடும்' என்றுள்ளதுகாண்; அங்குள்ள மீன்கள் நிலப்பண்பாலே தூணும் துலாமும்போல் தடித்திருக்கும்; அவை பறவைக் குட்டிகளின் வாய்க்குப் பிடிக்கமாட்டாவாகையால் உரிய சிறுமீன்கள் தேடிப் பிடிக்கவேண்டுமத்தனையன்றோ—என்று. 'பிள்ளைக்கு' என்றது உயிரான சொல்.

## 5 - 5 - 1. வெருவாதாள் வாய்வெருவி.

"திருப்பாணுழ்வார் 'அன்றுநேர்ந்த நிசாசரரை' என்று ராவணவதமே தொடங்கிப் பெருமாளை அடியொற்றினர், அது தெற்குத் திருவாசலாலே புகுந்து கிடந்தது: 'மந்திபாய்' என்று—பரமபதமே தொடங்கி அடியொற்றினர், திருமலையிலே புகுந்து கிடந்தது; அங்கே பார்த்தவாறே நின்றபடியைக் கண்டார், இன்னமும் போக்கிலே ஒருப்பாடு தோற்றியிருந்தது என்று அவ்விடமே தொடங்கி அடியொற்றினவாறே வடக்குத் திருவாசலாலே புகுந்து, படுக்கை இங்கேயாயிருந்தது' என்று, பட்டர் அமலனுதி பிரான் அருளிச் செய்யாநிற்க நான் கேட்டேன்" என்று பிள்ளை அருளிச்செய்தார்.

[விவரணம்:—*வெருவாதாள் வாய்வெருவி என்கிற பதிகம் திருவரங்கப் பதிகமேயல்லது திருவேங்கடப்பதிகமன்று; அப்படியிருக்க, பதிகம் தொடங்கும்போதே 'வெருவாதாள் வாய்வெருவி வேங்கடமே வேங்கடமேயென்கின்றாளால்' என்பானேன்? என்று சங்கை பிறக்கக்கூடும். கேண்மின். மேலுலகத்திலுள்ள ஸ்ரீவைகுண்ட திவ்ய நகரமே இம்மண்ணுலகில் திருவரங்கமாகவும், அவ்விடத்துள்ள விரஜா நதியே திருக்காவேரியாகவும் பரவாஸுதேவனே ஸ்ரீரங்கநாதனுகவும் அவதரித்ததாக மஹர்ஷிகளும் நம்பூருவர்களும் சொல்லுவர்கள். பரமபதநாதன் திருவரங்கத்திலே வந்து புகுவதற்காக அங்கு நின்றும் பயணமெடுத்துவிட்டு எழுந்தருளுமடைவிலே திருவேங்கடமலையிலே சிறிது இளைப்பாற நின்று பின்பு திருவரங்கத்திலே வந்து சாய்ந்தருளினதாக நிர்வஹிப்பதொருபுடையுண்டு; திருப்பாணுழ்வாரருளிச்செய்த அமலனுதிபிரானில் முதற்பாட்டில் 'விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்' எனறூர். இதனுல் விண்ணவர் கோனை தன்மையில் நின்றும் வேங்கடவனை தன்மைக்கு வந்தமை சொல்லிற்று. மேல் மூன்றும் பாட்டில் 'மந்திபாய் வடவேங்கட மாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றான் ' அரங்கத்தரவினணையான்' என்றூர்; இதனுல் திருவேங்கட மலையில் நின்றும் திருவரங்கத்திலே வந்து சாய்ந்தமை சொல்லிற்று. மேலும் திருவேங்கடமுடையான் நின்ற திருக்கோலமாக ஸேவை ஸாதிக்கின்றமையால் 'வெளிப்பயணத்திற்காக நிற்கிறாப்போலே யிருக்கிறது என்று தோற்றக்கூடியதாதலாலும், திருவரங்கத்தில் பள்ளிகொண்ட திருக்கோலமாக ஸேவை ஸாதிக்கின்றமையால் 'இனி எங்கும் போக நினைவில்லை' என்று தோற்றக்கூடியதாதலாலும் பரமபதத்திலிருந்து வருமடைவிலே திருமலையிலே நின்று கோயிலிலே வந்து சாய்ந்தானென்று நிர்வஹிப்பதில் பொருத்தம் நன்கேயுள்ளது. ஆக திருவரங்கத்திற்கும் மூலகந்தம் திருமலையாதலால் இப்போது கோயிலிலே ஆழ்வார்க்குண்டான ப்ராவண்யாதிசயம் அதற்கு வேர்ப்பற்றான திருமலையளவும் சென்றதனுல் 'வேங்கடமே வேங்கடமே யென்கின்றாளால்' என்றது பொருந்தக்கூடியதே—என்பது பட்டருபந்யாஸத்தின் விரிவு.]

(அவ்விடத்திலேயே என்கின்றாளால்) "பட்டர் 'அழகிய மணவாளப் பெருமாள்' என்னும்போதும், அனந்தாழ்வான் 'திருவேங்கடமுடையான்' என்னும் போதும், பாவபந்தமடையத் தோற்றியிருக்கும்படி காண்!" என்று ஜீயர்.

5 - 5 - 8. உறவாது மிலளென்றென்று.

('த்ருஷ்ட்வா ஸ்த்தித்வா பஹிர் குரும்') இதுக்கு பட்டர் "இவள் கிருஷ்ண விஷய ப்ரேமத்தில் புதிய துண்டிலள் காண்" என்றருளிச்செய்தார். சிலரைக் கண்ணுக்குத் தோற்றிற்றிறே யென்று.

[இது சிந்தயந்தியைப்பற்றியருளிச் செய்தது]

5 - 8 - 6. மன்னு நான்மறை மாமுனிபெற்ற.

(மன்னித்யாதி) ஆபிஜாத்யத்தால் வந்த உத்கர்ஷத்தைச் சொல்லி அவன் சரணம் புக்கானென்றது—இங்கு; "ஏழையேதலன்" என்றும் "வாதமாமகன்" என்றும் "நஞ்சு சோர்வதோர்" என்றும் நிகர்ஷத்தைச் சொல்லிற்று—கீழ்; இரண்டுக்கும் சேர்த்தி யென்னென்னில்; உத்கர்ஷாபகர்ஷங்களிரண்டும் சரணாகதிக்கு அப்ரயோஜகமென்கை. வேல்வெட்டி நம்பியார்க்குப் பிள்ளையருளிச் செய்த வார்த்தை.

5 - 8 - 7. ஓதுவாய்மையு முவனியப் பிறப்பும்

முற்பட த்வயத்தைக்கேட்டு இதிஹாஸ புராணங்களையு மதிகரித்து, பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளையு மதிகரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம் நம்பிள்ளையைப்போலே அதிகரிப்பிக்க வல்லவனையிறே 'ஒருவன்' என்பது.

5 - 8 - 9. துளங்கு நீண்முடி யரசர்தம்.

(மற்றவற்கருளிச் செய்தவாறு) குறும்பறுத்த நம்பியோடே சேர்த்துவிட்ட படியைச் சொல்லுகிறது;—"பதிவ்ரதையோடுண்டான ஏகாந்தத்திலநுபவத்தைத் திரளிலே வெளியிடுவாரைப்போலே, தானும் நானுமறிய அநுபவித்ததை இங்ஙனே வெளியிடுவதே! திருவேங்கடமுடையான் அலைவலையாகாதே!" என்றாரிறே.

5 - 8 - 10. மாடமாளிகை சூழ்.

"மாடமாளிகை சூழ் திருமங்கை மன்னன்" என்றவாறே "அணிபொழில் திருவரங்கம் எங்கே புக்கொளித்தது?" என்றருளிச்செய்தார் பட்டர்.

5 - 11 - 7. தந்தை மனமுந்து துயர் நந்த.

"பிறந்தது அங்கேயாகில், மீண்டும் போய் வளர்ந்த தங்கேயாகில், கம்ஸபயத்தாலே நாலுநாள் வளர்ந்த வித்தனையுங்கொண்டு, அறிவுகுறைய நின்றார் சொல்லுகையன்றிக்கே அறிவில் தலைநின்ற நம்போல்வார் இங்ஙன் சொல்லுகிற விதுக்கு ஹேது வென்?" என்று ஜீயர் பட்டரைக் கேட்க' "நாமே யன்று காணும்; அவதார காலத்துக்கு முன்பே அறிவுடையாராயிருப்பாரு மிப்படிச் சொன்னார்கள் காணும், 'அயம் ஸ கத்த்யதே ப்ராஜ்ஞைஃ' இத்யாதிகளாலே; அவர்களுக்கு முலை சுரவா நின்றதாகில் இவன்று னஞ்சா நின்றானாகில் உமக்கிவ்வாராய்ச்சி யென்தான்? என்றருளிச்செய்தார்.

6 - 2 - 2. மறந்தேனுன்னை முன்னம்.

மதுரையிலே நிர்வஹியா நிற்கச்செய்தே, ஒப்பிலாத பெருமாள், 'த்யேயோ நாராயணஸ் ஸதா' என்கிற விஷயத்தையாகாதே மறந்துபோந்தது" என்றார்.

6 - 3 - 3. மானேய் நோக்கு நல்லார்

(திருநறையூர்த்தேனே) பட்டர் "திருநறையூர்ப் பெருக்குக்குச் சினையாறு படுகிறதுகிடாய்!" என்றருளிச் செய்வர்.

[விவரணம்:—திருவிண்ணகர்த் திருப்பதி விஷயமான இத்திருமொழி முடிந்தவுடனே நூறு பாசுரங்களாலே திருநறையூரை அநுபவிக்கப்போகிறாரே ஆழ்வார்;

அதற்குள்ளே இப்போது (திருவிண்ணகரநுபவத்தில்) 'திருநறையூர்த்தேனே' என்று அத்திருப்பதியைப் பற்றி ப்ரஸ்தாவம் செய்வானென்? என்று நஞ்சீயர்போல்வார் பட்டரைக் கேட்டனர்போலும். அதற்கு பட்டரருளிச் செய்த மறுமாற்றமிது: ஆற்றில் பெருவெள்ளம் வரப்போவதற்கு முன்னே ஆறு பொசிந்து காட்டுவது வழக்கம். அதுபோல, மேல் நூறுபாசுரங்களாலே திருநறையூரநுபவமாகிற மஹாப்ரவாஹம் ஸமீபித்திருப்பதனால் அதற்கு முன்னடையாளமாகத் திருநறையூர்த்தேனேயென்று இவ்வாறு பொசிந்து காட்டுகிறது கிடாய் என்றார். இங்ஙனே மிகவழகிய அர்த்தம் பட்டர் திருவுள்ளத்தில்தானே தோன்றும்.]

## 6 - 3 - 4. சாந்தேந்து மென்முலையார்.

(சாந்தேந்து மித்யாதி) "விஷயங்களை விட்டு இவ்வருகே போந்தவிவர், வீதராகர்க்கும் ஸ்ப்ருஹை பிறக்கும்படி சொல்லுவானென்?" என்று பட்டர்க்கு விண்ணப்பம் செய்ய; "முரிக்குக் கிழக்கு என்னும்போதும் இங்ஙனல்லது இராதுகாண் திருமங்கையாழ்வார் நாவீறு" என்று அருளிச்செய்தார்.

[முரிக்குக் கிழக்கு-அஸாரம் என்றபடி. முரியாவது அணை; அதற்குக் கீழ்ப்பட்ட ஜலம் கழிவடை நீராய் அஸாரமாயிருக்குமென்று கொண்டு அஸாரமென்னும் பொருளில் முரிக்குக் கிழக்கென்பது]

(அவ்விடத்திலேயே) கிடாம்பியம்மாள், சிறியாண்டான்பெருமாள் பணித்தாணுகப் பலகாலும் சொல்லும்; "நான்சொல்லுகிற வாச்ய வாசகங்களே யன்றோ பட்டரும் வ்யவஹரிக்கிறது என்றிருக்க வொண்ணாது, அங்குத்தைக்கு ஏற்றமுண்டு;-முன்னே நின்ற தூணை நான் "தூண்" என்றவாறே சிராயாய்த்தோற்றும்; அவர் சொன்னவாறே தளிரும் முறியுமாய்த் தோற்றும்" என்று.

## 6 - 7 - 4. 'ஒளியா வெண்ணெய்'—

(ஆப்புண்டு) வங்கிப் புரத்து நம்பி, பலகாலும் "திருவாராதனக்ரம மருளிச்செய்ய வேணும்" என்று போருமாய், அவஸரஹாநியாலே அருளிச் செய்யாதே போந்தாராய், திருமலையிலே எழுந்தருளியிருக்கச் செய்தே, ஆழ்வானுக்கும் நம்பி ஸ்ரீ ஹநுமத்தாஸர்க்கும் அது தன்னை அருளிச்செய்தாராய்ச் சமைகிற வளவிலே நம்பிதோற்ற, திருவுள்ளம் துணுக்கென்றஞ்சி, அப்போதருளிச் செய்த வார்த்தை;—"என்றுமுள்ள இச்சம்சயந்தீரப் பெற்றோமாகிறது—நியாமகன் நியாம்யங்களிலே சிலர்க்கஞ்சிக் கட்டுண்டு அடியுண்டு அழுதுநின்றான் என்றால் இது கூடுமோ என்றிருந்தோம், இரண்டு இழவுக்கும் நம்முடைய ஹ்ருதயம் அஞ்சி நொந்தபடியால் அதுவும் கூடும்'; என்று.

[விவரணம்; வங்கிப்புரத்து நம்பி எமபெருமானார் ஸ்ரீபாதத்திலே பலகாலும் அநுவர்த்தித்து 'அடியேனுக்குத் திருவாராதன ப்ரயோக முபதேசிக்கவேணும்' என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். ஆனாலும் உபதேசிக்க அவகாசப்படாமலேபோயிற்று. இப்படியிருக்கையில் ஒரு நாள் கூரத்தாழ்வானுக்கும் ஹநுமத்தாஸர்க்கும் திருவாராதன க்ரமம் உபதேசிக்க நேர்ந்து உபதேசித்து முடிகிற ஸமயத்திலே வங்கிப்புரத்து நம்பி அங்கே வந்து சேர்ந்தார். அவரைக் கண்டவுடனே ஸ்வாமி திருவுள்ளம் அஞ்சி நடுங்கிற்று. 'இவர் பலகால் கேட்டுக்கொண்டிருந்தும் இவர்க்கு உபதேசியா தொழிந்தோம்; இன்று இவ்விருவர்க்கு உபதேசிக்கும்போதாவது இவரையும் கூட்டிக்கொண்டு உபதேசித்திருக்கலாம், அதுவும் செய்யப்பெற்றிலோம், இவ்விருவகைக் குற்றங்களுக்கு ஆளானோமே! என்று அஞ்சி நடுங்கின உடையவர் வங்கிப்புரத்து நம்பியை நோக்கி அழகாக ஒரு வார்த்தையருளிச் செய்தார்; அதாவது எனக்கு நெடுநாளாக இருந்த ஒரு ஸந்தேஹம் இன்று தீரப்பெற்றது; 'ஒளியா வெண்ணெ யுண்டானென்று

உரலோடாய்ச்சி யொண்கயிற்றால், விளியாவார்க்க வாப்புண்டு விம்மியழுதான்' என்றும் 'எழில்கொள் தாம்பு கொண்டடிப்பதற்கு எள்கு நிலையும........அழுகையுமஞ்சி நோக்குமந் நோக்கும்' என்றும் ஆழ்வார்களருளிச்செய்கிறார்களே, உண்மையில் இப்படியிருக்குமோ, நியாமகனான எம்பெருமான் நியாம்யரானவரிடத்தில் அஞ்சி வருந்தக் கூடுமோவென்று ஸந்தேஹ முண்டாயிருந்தது ; இப்போது உம்மிடத்தில் நான் அஞ்சி வருந்தினேனாகையால் அது ஸம்பாவிதமேயென்று துணியப்பெற்றேனென்றாராம்.]

## 6 - 7 - 6. வள்ளி கொழுநன் முதலாய.

(பள்ளி கமல மித்யாதி) "பட்டரருளிச் செய்யக் குறிப்பாகக் கேட்டிருப்பதொரு பாட்டு" என்றருளிச் செய்வர்;—"பகுவாயலவன் கமலத்திடை பள்ளி பட்டது, நள்ளியானது கர்ப்பதாரணத்தாலே கேதித்திருக்க, 'அதுக்கு இனியது இடவேணும்' என்று, மதுவுக்காகப்போந்த அலவனானது தாமரைப் பூவிலே வந்திழியக் கொள்ள, போது அஸ்தமிக்கையாலே, உடம்பைக்கொண்டு அங்கே யிங்கே புரண்டு ராத்திரி அதிலேதங்கி, அதில் தாதும் சுண்ணமும் உடம்பிலே நிழலிட்டுத் தோற்ற, போது விடிந்தவாறே வந்தது ; இது போனபோதே தொடங்கி, கதவைத் திறந்து வரவு பார்த்துக்கொடு நின்ற நள்ளியானது, இத்தைக் கண்டு, ராத்ரி தங்கினபடியாலும் உடம்பில் சுவடிருந்த படியாலும் 'இதுவெறுமனல்ல' என்று முகம் மாறிக் கதவையடைத்து உள்ளேபோய்ப் புக்கது." இத்தை பட்டர் அருளிச்செய்த வனந்தரம், பிள்ளை திருநறையூரரையர் "ஆராய்ந்து குற்றம் நிரம்பினால் பின்னையன்றோ தண்டிப்பது" என்ன ; "என்செய்வோம் ! கேள்வியில்லாதபடி பெண்ணரசு நாடாய்த்து" என்றருளிச் செய்தார்.

[விவரணம் ;—"பள்ளி கமலத்திடைப்பட்ட பகுவாயலவன் முகம்நோக்கி நள்ளியூடும் வயல் சூழ்ந்த நறையூர்" என்று மூல முள்ளது. அலவன் என்று ஆண் நண்டுக்குப் பெயர் ; நள்ளி யென்று பெண் நண்டுக்குப் பெயர். தாமரைமலரிலே சிறைப்பட்டிருந்து வந்து சேர்ந்த ஆண் நண்டினிடத்திலே பெண்நண்டு ப்ரணயரோஷம் காட்டுவதாக மூலத்திலுள்ளது. இது இன்னதென்று விளங்க பட்டர் இன்சுவை மிக விவரித்தருளின விதம் எங்ஙனே யென்னில் ; ஓர் ஆம்பல் மலரிலே நண்டு தம்பதிகள் இனிதுவாழ்கையில் கருக்கொண்ட (கர்ப்பிணியான) பேடைக்கு இனியவஸ்துக்களைக் கொணர்ந்து தரவேணுமென்று ஆண் நண்டுக்கு ஆசையுண்டாயிற்று. தாமரை மலரிலிருந்து நல்ல மகரந்தத்தைத் திரட்டிக் கொணர்ந்து கொடுப்போமென்று புறப்பட்டு மெல்ல மெல்ல நகர்ந்து தாமரைப்பூவிலே சென்று சேர்ந்தது ; அவ்வளவிலே ஸூர்யன் அஸ்தமிக்கவே அத்தாமரை மலர் மூடிக்கொள்ள, அதனுள்ளே அகப்பட்டது அது. தாமரையை மலர்த்திக்கொண்டு எப்படியாவது வெளிக்கிளம்பி விடவேணுமென்று எவ்வளவோ முயற்சிகள் செய்து பார்த்தவளவிலும் ஸூர்யோதயமானாலல்லது தாமரை மலராதாயிற்று. உடம்பைக்கொண்டு புரண்டு இரவெல்லாம் அதிலே தங்கியிருந்து பொழுதுவிடிந்தவாறே மலர்ந்த அம்மலரினின்று வெளிப்பட்டு, தாதும் சுண்ணமும் உடம்பிலே நிழலிட்டுத்தோற்றத் தன்மனைக்கு விரைந்துவந்து சேர்ந்தது ; பகற்போதில் ஆம்பல் மலர் மூடிக்கொள்ளுமே ; ஆண்நண்டு அங்குவந்து சேரும் ஸமயமும் பெண் நண்டுகிடக்கும் ஆம்பல்மலர் மூடிக்கொள்ளும் ஸமயமும் ஒன்றாயிருந்தது. இதனைப் பார்த்தால், ஆண் இரவில் வேறிடத்துத் தங்கிவந்தபடியாலும், உடம்பில் சுவடு இருந்தபடியாலும் பிரணயரோஷங்கொண்டு கதவையடைத்துக்கொண்டது என்னலாம்படியிருந்ததாம். [ஒருபுறத்தில் மலர்ந்த தாமரைகளும் மற்றொரு புறத்தில் முகுளிதமான ஆம்பல்களும் விளங்கப்பெற்ற வயலால் சூழப்பட்டது திருநறையூர் என்று வயல் நிலைமை சொன்னவாறு.] இப்பொருளை பட்டர் அருளிச் செய்தபோது கேட்டிருந்த பிள்ளை திருநறையூரரையர் 'விசாரணை செய்யாமல் குற்றத்தை நிச்சயித்துத் தண்டனை செய்துவிடலாமோ?' என்று கேட்டாராம் ; அதற்கு பட்டர் ரஸகனமாக விடை கூறி

ஞர்—'வாஸ்தவந்தான்; நாமென் செய்வது? கேள்வியில்லாதபடி பெண்ணரசு நாடாயிற்றே!' என்று. (அதாவது) திருநறையூர்க்கு நாச்சியார்-கோயிலென்று ப்ரஸித்தி இன்றைக்கு முண்டு. அங்கு எம்பெருமானுக்கு அப்ராதான்யமும் நாச்சியார்க்கு ப்ராதான்யமு முள்ளது. திருவீதிப்புறப்பாடுகளில் நாச்சியார் முன்னே யெழுந்தருள்வதும் எம்பெருமான் பின்னே யெழுந்தருள்வதுமா யிருக்கும். ஆணரசுநாடாகில்கேட்பாருண்டு; பெண்ணரசு நாடாகையாலே கேட்பாரில்லை—என்று இதுவும் ஒரு ரஸோக்தி.]

## 6-8-3. தூவாய புள்ளூர்ந்து.

"ராஜபுத்ரர்களைப் பிணைத்தால் கைக்கூட்டனுக்கும் பாலும் சோறும் இடக்கடவதுகாண" என்றருளிச் செய்தார் பட்டர்.

## 6-8-6. உம்பருலகோடு.

(அம்பன்ன கண்ணாளித்யாதி) பிள்ளையுறங்காவில்லிதாஸர் "பிள்ளைக்குத் தாய் வழியாகாதே கண்" என்றருளிச் செய்வர்.

## 6-8-7. கட்டேறு நீள்சோலை.

(வண்டுவரை நட்டானை) "தான் சொப்பனக் குடியேறுவதற்கு முன்னே தன்னைக் குடியிருத்தினவன், தன் புழைக்கடையிலே ஒரு குப்பைமேனியைப் பிடுங்கினுனென்று வஜ்ரத்தைக்கொண்டு தொடருவதே!" என்று பிள்ளை யமுதனர் பணிக்கும்படி.

## 6-9. பெடை யடர்த்த—ப்ரவேசம்.

'ஸக்ருதேவ'வுக்கு 'ஸஹஸைவ என்று ஆழ்வான் நிர்வஹிப்பதொரு பொருளுண்டிறே; "ஒரு ஜந்மமாக ப்ரபத்தி பண்ணுமது சாலவும் அஸக்ருத்தாயிருந்ததோ? பெறுகிறபேற்றைப் பார்த்தால்" என்றருளிச் செய்தார் எம்பார்.

## 6-10-7 பொங்கு புணரிக்கடல் சூழ்.

(நங்கள் வினைகள்) எண்ணாயிரத்துத் திருவாய்க் குலத்தாழ்வான், நஞ்சீயரை "ப்ரபத்தியாகிறது, புத்திபூர்வம் பண்ணின பாபத்துக்கும் பரிஹாரமாகவற்றோ? ப்ராமாதிகத்துக்கேயோ? என்ன, "அதினுடைய ப்ரபாவத்தைப் பார்த்தால் புத்தி பூர்வத்துக்கும் பரிஹாரமாகவற்று, ஜ்ஞானம் நடையாடின விடத்தில் அநுதாப மின்றிக்கேயிராதிறே, ஆகையாலே இவன் பக்கல் ப்ராமாதிக மல்லது கூடாது, பூர்வாகத்தைப் போக்குகிற இது புத்திபூர்வத்துக்குப் பரிஹாரமாகாது என்ன வொண்ணுதே—அதில் புத்தி பூர்வமொழிய இல்லாமையாலே."

## 7-1-1. கறவா மடநாகு.

கறவா மட நாகானது, தன்கன்றை யுள்ளினுப் போலே, என்று சொல்ல நினைத்து, அர்த்தத்துக்குச் சேராமையாலே மிடிபட்டார் பிள்ளை யமுதனர்., அதுதான் அபக்ஷதர்மமாமிறே; ஆகையாலே, பட்டரருளிச் செய்யும்படி—கறவா மட நாகை, தன் கன்றுள்ளினுப்போலே என்று.

[விவரணம்:—இப்பாட்டின் முன்னடி "கறவா மட நாகுதன்கன்றுள்ளினுற்போல், மறவாதடியேன் உன்னையேயழைக்கின்றேன்" என்றுள்ளது. பிள்ளையமுதனர் என்னுமாசிரியர் இதற்குப்பொருள் சொல்லப்புகுந்து, "கறவா மட நாகு—கறவாத மடநாகானது, தன்கன்று உள்ளினுற்போல—தன்கன்றை நினைக்குமாபோலே" என்று பொருள் சொல்லப் பார்த்து, இவ்வர்த்தம் இரண்டாமடியோடு சேராமையாலும், வேறு

வகையாகப் பொருள் சொல்ல ஸ்புரியாமையாலும் சிரமப்பட்டாராம். (நாகானது தன் கன்றை நினைக்குமாபோலே என்றால்—நாகின் ஸ்தானத்திலே ஆழ்வாரையும் கன்றின் ஸ்தானத்திலே எம்பெருமானையும் கொள்ளவேண்டி வருகையாலே இது அஸங்கதமாயிருக்கிறதே யென்று மிடிபட்டார்.) அவ்வளவிலே, பட்டரிடத்திலே பொருள் கேட்ட வொருவர் அந்த கோஷ்டியிலேயிருக்கக் கண்டு இவ்விடத்தை பட்டர் நிர்வஹிப்பது எங்ஙனே?' என்று கேட்க, நாகு என்ற சொல் இரண்டாம் வேற்றுமைப் பொருளது; கறவாமட நாகைத் தன் கன்று உள்ளினாற்போல் என்று பட்டர் நிர்வஹிக்கும்படி—என்றாராம். நாகு தன்—நாகினுடைய, கன்று—கன்றானது, உள்ளினாற்போல்—தாயையே நினைத்துக் கத்துமாபோலே—என்றுரைப்பது முண்டு. நாகு—இளம் பெண்மாடு. பால் சுரவாத பசுவின் ஸ்தானத்திலே அருள்புரியாத எம்பெருமான் கொள்ளப்பட்டான்; கத்துகின்ற கன்றின் ஸ்தானத்திலே ஆழ்வார் தம்மை வைத்துக்கொண்டார்.]

## 7-4 கண்சோரவெங்குருதி (ப்ரவேசம்)

பெரியநம்பி, ஜந்ம வ்ருத்தாதிகளால் குறைய நின்றாரொருவர் திருநாட்டுக்கு நடந்தாராய், அவரை அநுகமநம் பண்ணி, தீர்த்தமாடாதே வந்தெழுந்தருளியிருக்க, இத்தை எம்பெருமானார் கேட்டருளி, பெரிய நம்பி பாடே வந்து, "மர்யாதை கிடக்கக் கார்யம் செய்ய வேண்டாவோ?" என்ன; "பயிலும் சுடரொளி, நெடுமாற் கடிமை கடலோசையோ பாதியோ? சிறிது குறைய வாகிலும் ஆசரிக்க வேண்டாவோ?" என்றருளிச் செய்தார்.

(அவ்விடத்திலேயே) பிள்ளை அழகிய மணவாளரரையர், கரையே போகாநிற்க, "உள்ளே மாமதலைப் பிரானைத் திருவடிதொழுது போறாலோ" என்ன; "ஆர்தான் திருமங்கையாழ்வாருடைய பசைந்த வளையத்திலே கால்வைக்கவல்லார்" என்றருளிச் செய்தார்.

[விவரணம்;—பிள்ளை அழகிய மணவாளரரைய ரென்பவர் காரிய விசேஷமாகத் திருச்சேறைவழியாய் ஓரிடத்திற் கெழுந்தருள நேர்ந்தவளவில் திருச்சேறைப்பதியினுட் புகாமல் வயல்வழியே போய்க்கொண்டிருந்தார்; அங்கு அவரைக்கண்ட வொருவர் 'வயல்வழியே போவானேன்? திருப்பதியினுள்ளே சென்று ஸாரநாதப் பெருமானை ஸேவித்துப்போகலாகாதோ? என்ன; அதற்கு அரையர் சமத்காரமாக ஓர் உத்தர முரைத்தார்; (அதாவது) இத்திருப்பதி விஷயமாகப் பாசுரமுரைத்த திருமங்கையாழ்வார் 'தண்சேறையெம் பெருமான் தாள் தொழுவார் காண்மின் என் தலைமேலாரே' என்றார்; அப்பாசுரத்தின்படி, ஸாரநாதப் பெருமானை ஸேவிப்பவர்கள் ஆழ்வாருடைய திருமுடியின் மீது ஏறவேண்டியதாகுமே; அது நமக்குப் பெருத்த அபசாரமாகுமே; அதற்கு அஞ்சியே உள்ளுப்புகாமல் கரையோரமே போய் விடுகிறேன் என்றாராம். இது ரஸோக்தியேயன்றி வேறன்று.]

## 7-5-2. பாரித்தெழுந்த படைமன்னர்.

(தேரில் பாகனாயூர்ந்த] ஆழ்வானுக்கு மூலம்வாசித்துப் போந்தார் சிலரிலே, ஒருவருக்கு க்ரந்தம் பார்க்கவேண்டி, ஆழ்வானோடே திருமுடிக்குறையிலே யிருந்து பாராநிற்கச்செய்தே, அரையன் வந்தானாய், அவ்வளவிலே, அவர்கையில் க்ரந்தத்தை, ஆழ்வான் தான் வாங்கிப் படித்துக் கொண்டிருந்தானும்.

[வாசிப்பவர் ஆழ்வானிடத்தில் தாம் வாசிப்பதாகப் பிறர்க்குத் தெரியக் கூடாதென்று கருதியிருந்தவராதலால் அவருடைய கருத்திற்கிணங்க, ஆழ்வான் (அரையன் வந்தஸமயத்திலே) அவர்கையினின்று ஸ்ரீ கோசத்தைத் தாம் வாங்கிக்கொண்டு அவரை ஆசாரியராகவும் தம்மை அந்தேவாஸியாகவும் அபிநயித்து விட்டாரென்றபடி.]

### 7 - 7 - 10. அன்ன மன்னுபைம்பூம் பொழில்

(மன்னி மன்னவராய்) இந்த்ரிய வச்யதையை அநுஸந்தித்து அஞ்சினவர், இத்தை பலமாகச் சொல்லுவானென்னென்னில்; "இவர்க்கு அந்த ஐச்வர்யம் பாகவத சேஷமாக்குகைக்கு உடலாகையாலே, அதுவும் புருஷார்த்தத்திலே புக்குப் போயிற்று காண்" என்று பட்டர் அருளிச் செய்வர்.

### 7 - 10. பன்றியாய் மீனாகி யரியாய்.

" திருமங்கையாழ்வார் தாம் பாகவத சேஷமாக்குகைக்கு உடலாயிருக்கையாலே ஐச்வர்யத்தையும் ஆதரித்தருளினார் " என்றருளிச் செய்வர்.

### 8 - 1. சிலையிலங்கு பொன்னாழி - ப்ரவேசம்.

ராஜேந்த்ர சோழனிலே ஒரு ப்ராஹ்மணன் மகன், புத்தரோடே ஸம்ப்ரதாய முண்டாய், பூணு நூலையும் குடுமியையும் அறுத்துப் பொகட்டான்; கூரத்தாழ்வான் அங்கே நடந்தவளவிலே, சிகா யஜ்ஞோபவீதங்களைத் தரித்துக்கொண்டுவந்து புகுந் தான்; பிதாவானவன் "கூரத்தாழ்வானைச் சந்தித்தாயோ?" என்று கேட்டான்; புறம் புள்ளார், 'நீ இதறிந்தபடி எங்ஙனே' என்று கேட்க, "ஆழ்வான் ஸந்நிதியில் தமோபி பூதரும் ஸத்வஸ்த ராவர்கள் காண்" என்றான்.

### 8 - 1 - 1. சிலையிலங்கு பொன்னாழி.

நிலாத்துக் குறிபகவர், பட்டரை ஸ்ரீவைகுண்டத்திலே சதுர்ப்புஜனாயிருக் கைக்கு ப்ரமாணமென்னென்று கேட்க; அவர் சொல்லி வாய்மாறுவதற்கு முன்பே "தமஸஃபரமோ தாதா சங்க சக்ர கதாதரஃ என்னாநின்றதே யென்ன; போக்கடி காணா மையாலே கோபத்தாலே கண்சிவக்க, "ப்ரமாணகதிகள் இவையாயிருந்தது, பொறுக்கு மத்தனையிறே" என்றருளிச்செய்தார்.

### 8 - 1 - 2. செருவரை முன்னாசறுத்த.

பிள்ளை திருக்கண்ணபுரத்தரையர், விரோதி வர்க்கம் கூடிக்கொண்டு அற மிகைத்தவாறே "செருவரைமுன் ஆசறுத்த சிலையன்றோ கைத்தலத்தது" என்று விண் ணப்பஞ்செய்ய, ஒரு க்ஷணத்திலே முடிக்கிறோமென்று அருளிச் செய்தார்.

### 8 - 1 - 8. கொற்றப் புள்ளொன்றேறி.

பிள்ளையமுதனார் இத்திருமொழிக்கு ப்ரவேசம் சொல்லா நிற்க, ராஜாக்கள் அந்தஃபுரக்கட்டிலே தெருவிலே பள்ளியந்துலாத்திலே ஏறி உலாவா நிற்பர்கள்காணென் றாப் போலே அநேகம் வாக்ய சில்பங்களைப் பண்ணினார். அப்போது பால்யத்தாலே அவ்வடைவுகள் புத்தி பண்ணப் பெற்றிலோம். அவற்றுக்கு இதில் பற்றாசேதென்று விசாரித்தோம். இது வாகாதேயென்று தெளிந்தோங்காணு மென்று இவ்வளவிலே பிள்ளை யருளிச்செய்தார்.

### 8 - 1 - 9. வண்டமரும் வனமாலை.

(பண்டித்யாதி) முதல் நாள் கண்டால் ஸ்வாபாவிகமான ஸ்வாமித்வத்தாலும் முகத்தில் தண்ணளியாலுமாக, "முன்பே கண்டறியும் முகமாயிருந்ததீ, எவ்வூரில்தான் கண்டது" என்னும்படியிருக்கும்; சிரபரிசயம் பிறந்தால் பின்பு "முன்போரிடத்திலும் இவனைக் கண்டறியோம்" என்னும்படியாயிருக்கும். நித்யாபூர்வமான விஷய மென்ற படி. சொன்ன விரண்டர்த்தத்தையும் அது காட்டுமோவென்ன; பயில்கின்றாளால் என்றது கண்டாயே, எற்றைக்கும் வார்த்தை இதுவேயன்றோ, இப்படியாக வேண் டாவோ" என்று ஜீயர்.

[விவரணம்:—*பண்டிவரைக் கண்டறிவ தெவ்வூரில் யாம் * என்பதற்கு இரண்டு வகையான பொருள் சொல்லஇடமுண்டு. 'முன்பு இவரைஎவ்விடத்திலோ பார்த்திருக்கிருப்போல இருக்கிறதே, எங்கே பார்த்திருப்போம்' என்று ஆலோசிப்பதாக ஒரு பொருள். பண்டு இவரை எவ்வூரில் கண்டறிவது—எவ்வூரிலும் கண்டறிந்ததில்லை, இப்போது தான் முதன்முதலாகக் காண்கிறோம்—என்பதாக மற்றொரு பொருள். ஒரு முறை பிரயோகிக்கப் பட்டிருக்கின்ற வாக்கியம் பரஸ்பரவிருத்தமான இவ்விரண்டு பொருளையும் ஏககாலத்தில் எங்ஙனே தருமென்று சங்கை. அதற்கு ஸமாதானம்; மூலத்தில் என்றேபயில்கின்றாளால் என்றிருப்பதால் 'பண்டிவரைக் கண்டறிவ தெவ்வூரில்யாம்' என்னும் வார்த்தையைப் பலகாலும் சொல்லுகிருளென விளங்குதலால் அந்த வார்த்தையை முதல்தடவை சொல்லும்போது முதற்பொருள் தோன்றும்; அடுத்த தடவைகளில் இரண்டாவது பொருள் தோன்றும் என்னக் குறையில்லை. இவ்விரண்டு பொருள்களின் ஸ்வாரஸ்யமென்னவெனில்; சௌரிப்பெருமாளை முதன் முதலாக ஸேவிக்கும்போது திருமுக மண்டலத்தில் தண்ணளி முதலியவற்றைக்கொண்டு 'இவரை முன்பு எங்கோ ஸேவித்தாற்போலிருக்கிறதே' என்று தோன்றும்; அதன் பிறகு எவ்வளவு நெருங்கிப்பழகிலும் தெகுட்டுதலின்றியே 'எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழி தொறும் அப்பொழுதைக்கப்பொழு தென்னுராவமுதமே' என்னும்படியான விஷயமாகையாலே முன்பு எங்கும் கண்டறியாததுபோலவும் அப்பொழுதே புதிதாகக் கண்டு அநுபவிப்பது போலவும் தோன்றிக்கொண்டேயிருக்கும். மற்ற விஷயங்களிற் காட்டிலும் பகவத் விஷயத்திற்குள்ள வைலக்ஷண்யம் இது. என்று காட்டினபடி.]

## 8 - 2 - 2. நீணிலாமுற்றத்து.

(காணுமோ) வடமதுரைப் பிறந்தான் மகன், கோயிலாழ்வார் ஸந்நிதியிலே கண்ணைச்செம்பிளித்துக் கொண்டிருந்து ஜபித்தான்; பட்டர் திருவடி தொழ வெழுந்தருளினவர் இத்தைக்கண்டு "கோயிலாழ்வார் கண்ணுக்கு விஷயமாயிருக்க கண்ணைச் செம்பிளித்திருப்பதே; இவன் கண்ணால் ப்ரயோஜநம் கொள்ளமாட்டானாகாதே" என்று வெறுத்தெழுந்தருளினார். அவனுக்கு ஒன்றிரண்டு மாஸத்துக்குள்ளே கண் கெட்டதிறே.

## 8 - 2 - 6. வடவரை நின்றும் வந்து.

(அவதாரிகை) ஆப்பான் திருவழுந்தூர் அரையரும், ஆழ்வார் திரு நறையூரரையரும் இப்பாட்டை அநுஸந்தித்து "இப்பாட்டுக்கு ஒரு சேர்த்தி கண்டிலோம்" என்று பட்டர் பாடே வந்து, "இப்பாட்டிருக்கிறபடி யென்" என்று கேட்க; "மகளநுகாரத்தைத் தாய் அநுபாஷிக்கிருள்" என்றருளிச் செய்தார்.

[விவரணம்:—'வடவரை நின்றும் வந்து இன்று கணபுரமிடவகை கொள்வதுயாமென்று பேசினாள்' என்று மூல முள்ளது. வடக்குத் திருமலையில் நின்றும் புறப்பட்டு வந்து இப்போது திருக்கண்ண புரத்தை இருப்பிடமாகக் கொண்டிருப்பது நானேயென்று சொல்லுகிருளென்பது பொருள். இங்ஙனே சொல்லுவதன் கருத்து விளங்கவில்லையே யென்று சங்கை. அதற்கு பட்டருடைய ஸமாதானமாவது—அநுகாரத்தாலே தரிப்பது என்று ஒன்றுண்டு. பண்டு திருவாய்ப்பாடியிற் பெண்கள் கண்ண பிரானைப் பிரிந்து ஆற்றமாட்டாமல் மாமியார் மாமனார் முதலானாருடைய காவலையுங் கடந்து யமுனையாற்றின் கரையிலே அப்பிரானை யநுபவிப்பதாக வந்தவளவிலே அங்கு அவனைக் காணாமல் முன்னிலும் ஆற்றாமை விஞ்சி ஏதேனு மொருபடியாலே தரிக்கப்பார்த்து. * துஷ்ட காலிய! திஷ்டாத்ர க்ருஷ்ணோஹ மிதி சாபரா * இத்யாதிப்படியே, அடாகாளியனே! நில்; நான் கண்ணன்; உன்மேலேறித் துவைத்து நர்த்தனஞ் செய்யப்போகிறேன் என்றும் மற்றும் பலவிதமாகவும் கண்ண பிரான் போலவே தங்களையநுகாரஞ் செய்துகொண்டு பேசித்தரித்தார்கள். நம்மாழ்வாரும்

திருவாய்மொழியில் * கடல் ஞாலஞ் செய்தேனும் யானேயென்னும் * என்று தொடங்கிப் பத்துப்பாசுரங்களாலே தம்மை எம்பெருமானாகப் பேசித்தரித்தார். அந்த நிலைமை பரகால நாயகிக்கும் நிகழ்கின்றமை இப்பாசுரத்தில் விளங்கும். மற்றை யாழ்வார்களிற் காட்டிலும் இவ்வாழ்வார்க்கு அர்ச்சாவதாரத்தில் ப்ராவண்யம் அளவற்றதாகையாலே இவ்வநுகாரமும் அர்ச்சாவதார விஷயமாகவே செல்லுகின்றது. வடக்குத் திருமலையாகிய திருவேங்கடமலையில் வாஸத்தைவிட்டுக் கீழைவீடாகிய திருக்கண்ண புரத்திலே நித்ய வாஸம் பண்ண இன்று இங்குவந்து சேர்ந்திருக்கிறோம் யாம் என்று—தன்னைச் சௌரிப் பெருமாளாகவே அநுகரித்துச் சொல்லுகிறாள்.]

## 8 - 5 - 6. மூரியும்வெண்டிரை.

(தீப்பட) நெருப்புக் கொளுந்தியெரிய. விக்ரம சோழதேவர் "இதென்ன வைக்கோல் போர்தான்."

## 8 - 10 - 1. வண்டார் பூ மாமலர் மங்கை.

(நால் வேதம் கண்டானே) ப்ரளய காலத்தில் இவற்றினுடைய ஆநுபூர்வியை ஸ்மரித்திருந்து வெளியிடுகையிறே - இவற்றைக் காண்கையாவது. நித்யமான வேதத்தில் ஸாக்ஷாத் காரத்துக்கு மேற்படவில்லையிறே. அன்றிக்கே பட்டர் அருளிச் செய்தாராகச் சிறியாத்தான் பணிக்கும்படி: "இது கர்த்தரி அன்று, கர்மணி கிடாய்" என்று. ப்ராப்யப்ராபகங்களிரண்டும் அவனே யென்னுமிடத்தையாயிற்று வேதங்கள் வெளியிட்டது.

[விவரணம் ;—கண்டான் என்பதற்கு - கண்டவன் என்றும் காணப்பட்டவன் என்றும் பொருள்படுவது தமிழ் மரபு. இப்பொருள்கள் வடமொழியில் முறையே கர்த்தரி யென்றும் கர்மணியென்றும் வழங்கப் பெறும். இங்கு, நால்வேதங்களையும் கண்டவனே! எனப்பொருள் கொள்வது கர்த்தரிப் பொருளாகும். நால்வேதங்களாலும் காணப்பட்டவனே! எனப்பொருள் கொள்ளுதல் கர்மணிப் பொருளாகும்; இப்பொருள் கொள்ளவேணுமென்பது பட்டர் திருவுள்ளம். நால்வேதங்களையும் கண்டவனே! என்பதில் விசேஷமில்லை ; நால்வேதங்களாலும் காணப்பட்டவனே! எனபதில் ஸ்வாரஸ்யமுண்டு. உபாயமும் உபேயமும் தானேயாக நால் வேதங்களாலும் நிஷ்கர்ஷிக்கப்பட்டவனே! என்றவாறு. 'நான் கண்ட பொருள்' என்றால் 'என்னாலே காணப்பட்ட பொருள்' என்று பொருள்படுவது போல, நால்வேதங்கண்டானே யென்றதற்கு நால்வேதங்களாலும் காணப்பட்டவனே யென்று பொருள்படுதல் எளிதேயென்றுணர்க.]

## 8 - 10 - 3. மற்றுமோர் தெய்வம்.

"கண்ணபுரத்துறை யம்மானே! நின்திரு வெட்டெழுத்தும் கற்று நானுற்றதும் உன்னடியார்க் கடிமை" என்றுவது. "உன்னளவில் நின்றவனல்லேன் என்றபோது அவன் திருவுள்ளமென்படுகிறதோ?" என்று நஞ்சீயரருளிச் செய்ய ; பிள்ளை "அல்லிக் கமலக் கண்ணனாகிறான்" என்றருளிச்செய்தார். "நீசகமில்லா வடியார்தம் மடியாரடியாரடியா ரெங்கோக்கள்" என்று இவர் பாகவத சேஷத்வத் தளவிலே நின்றவாறே, அவன் அல்லிக் கமலக்கண்ணனானிறே.

## 8 - 10 - 5. பெற்றாரும் சுற்றமும்.

(கற்றா ரித்யாதி) நீ வர்த்திக்கிற ஊரிலுள்ளார் விழுந்த வேடெடுத்து வாசிததறிவாருண்டோ? அறிவுடையார்க் கெல்லாம் படவேண்டாவோ? "ஆர்யேண—கருணம் கார்யம்" என்னக் கடவதிறே என்று ஜீயரருளிச்செய்த வார்த்தை.

[விவரணம் ;— பரிபூர்ணமான அநந்யகதித்வத்தை யுடையேனை நான் 'களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்' என்றாற்போலே உன்னை வந்து

பணிந்தேன் ; 'எங்கும் புகலற்று நம்மையே பற்றி வந்தானிவன்' என்று திருவுள்ளம் பற்றி அடியேன்பால் அருள்புரியவேணும்; இல்லையாகில் பரமபதம் திருப்பாற்கடல் முதலிய இடங்களை விட்டுத் திருக்கண்ணபுரத்தே கோயில்கொண்டெழுந்தருளியிருப்பது பயனற்றதாகுங் காண்; நீ வர்த்திக்கிற ஊரிலே உள்ளவர்கள் ஸாமாந்யரல்லர் ; கலையறக்கற்றுணர்ந்த மாஞானிகள் ; வேறு புகலற்று வந்தவனைக் கைக் கொள்வது தகுதியோ? கைவிடுவது தகுதியோவென்று அவர்களைக் கேட்டாகிலும் நீ உணரப் பெறலாம் என்பது பரமதாத்பரியம்.]

## 9 - 2 - 1. பொன்னிவர் மேனி.

(பொன்னித்யாதி) பொன்னிவரென்று நிர்வஹிப்பர் பிள்ளையமுதனார், 'எண்ணும் பொன்னுருவாய்' என்னுமாபோலே ஸ்வரூப பரமாக்கி. அன்றிக்கே, (பொன்னிவர்மேனி) இவருடைய வடிவைப் பார்த்தவாறே "சுட்டுரைத்த நன்பொன்னுன் திருமேனி யொளி யொவ்வாது" என்கிறபடியே நன்றான பொன்னென்னலாயிரா நின்றது.

[விவரணம் ;—'இவர்மேனி பொன் ; மரதகத்தின் பொங்கிளஞ் சோதியகலத்து ஆரம்மின்' என்று இரண்டு வாக்கியமாகக் கொள்வது. இப்படியன்றிக்கே, பிள்ளை முதனார் மூன்றுவாக்யமாக நிர்வஹிப்பராம் ; இவர் பொன் ; மேனி மரதகத்தின் பொங்கிளஞ்சோதி ; அகலத்து ஆரம் மின் என்றும். 'இவர்பொன்' என்றது— * எண்ணும் பொன்னுருவாய் * என்னுமாபோலே ஸ்வரூப பரமாகச் சொன்னவாறும்.]

## 9 - 3 - 1 தன்னை நைவிக்கிலென்.

(பொன்னை நைவிக்கு மித்யர்தி) ஒரு கார்ய புத்தி பண்ணியிருப்பார்க்கன்றோ ஆறியிருக்கலாவது. சுவடறிந்து பிரிந்தார்க்கும் தரிக்கப்போமோ? ஒரு ஸ்ரீ ஜநகராஜன் திருமகள் போல்வார்க்கன்றோ அவன்றானேவருமளவும் ஆறியிருக்கிறோமென்று தரிக்கலாவது. பழையார் பாடாற்றவல்லது—புதியார்க்கும் ஆற்றப்போமோ? (ஆருயிர்பட்டதெனதுயிர்பட்டது) என்னக்கடவதிறே; "அஸாதாரணரான நித்ய ஸூரிகளில் ஒரு திருவடி திருவனந்தாழ்வான் போல்வார் தான் பட்டார்களோ நான் பட்டபடி ?" என்கிறுரென்றாராயிற்று. இதுக்கு ஜீயர் அருளிச்செய்யும்படி:—இது தன்னை ஆழ்வார் பாடாநிற்க, எம்பெருமானார்—"அங்கு ஆருயிர் பட்டது, இங்கு எனதுயிர்பட்டது" என்றருளிச்செய்தார். "ஆழ்வார்களுடைய அநுபவத்தையாகில் ப்ராப்யமாகச் சொல்லுகிறதும், ஆசைப்படுகிறதும் ; அதுக்கவ்வருகே ஒரேற்றம் சொல்லுவாரைப்போலே சொல்லுவானென்" என்று நான் ஜீயரைக் கேட்க, நவோடையான ஸ்த்ரீக்கு பர்த்தாவினுடைய கரஸ்பர்சமுண்டானால் வேர்ப்பது விடுவதாமாபோலே, அநுபவத்தில் புதுமையாலே படுகிற அலமாப்புக்காணுமென்றருளிச் செய்தாராகப் பிள்ளை அருளிச்செய்வர்:

## 9 - 5 - 1. தவளவிளம்பிறை.

"என்நலமைந்தும்" என்கிறவிது - ச்ரோத்ராதிகளால் வருமறிவை யென்னுதல் ; அன்றிக்கே, "என்னலனுமென்னிறைவும்" என்கிறத்தை என்று அமுதனார்.

[விவரணம் ;—திருநெடுந்தாண்டகத்தில் * என்னலனும் என்னிறைவும் என் சிந்தையும் என்வளையுங்கொண்டு என்னையாளுங் கொண்டு * என்ற பாசுரத்தில் (கொள்ளப்பட்டனவாகச்) சொல்லப்பட்ட ஐந்தையும் என்றபடி.]

## 9 - 6 - 1. அக்கும் புலியின்.

(தக்கமரத்தின்) "ஒரு முள்பற்றை யன்றிக்கே, பாலர்க்கும் தவழ்ந்தேறலாம்படி யிருக்கு மங்குத்தை வ்ருக்ஷங்களின்படி" என்று பட்டரருளிச் செய்தாராக ப்ரஸித்தமிறே. அன்றிக்கே, மேலே "கொக்கின் பிள்ளை" என்கையாலே தன்னோடு நாமஸாம்யத்தை யுடைத்தான மரத்திலே என்பாரு முண்டு.

[விவரணம் :—(தக்கமரத்தின்) என்பதற்கு இரண்டுவகையாகப் பொருள் கூறுவர்; அவ்விடத்து எம்பெருமான் எப்படி ஸௌசீல்ய குணம் வாய்ந்தவனே அப்படியே அங்குள்ள மரமும் சிறுவர்க்கும் தவழ்ந்து ஏறலாம்படி தாழ்ந்திருக்கு மென்பது பற்றித் தக்கமரமென்றது. எம்பெருமானோடு தகுதியுடைய மரம் (அதாவது – எம்பெருமானோடு குணஸாம்ய முடைய மரம்) என்றபடி. இது பட்டர் நிர்வஹிக்கும்படியாம். இங்ஙனன்றியே, மேலே 'கொக்கின் பிள்ளை' என்கையாலே இங்குத் தக்கமரம் என்றது அந்தக்கொக்கு தன்னோடு ஸமானமான நாமமுடைய மரம் என்றபடியாய் மாமரத்தைச் சொல்லுகிறது என்னவுமாம். (கோக்கு) என்று பக்ஷிவிசேஷத்திற்குப் போலே மா மரத்திற்கும் பெயர். "சூதஞ் சேதாரம் ஆம்பிரம் கொக்கு, தேர்மாமரத்திவை தேமாவாகும்" என்பது திவாகர நிகண்டு. "எங்கும் கொக்கின் பழம் வீழ் கூடலூரே" என்றார் கீழும்.]

## 10 - 2 - 1. இரக்கமின்றி.

(அரக்கராடழைப்பாரில்லை) "ராக்ஷஸரில் இனி ஆடுபோலே கூப்பிடக்கடவாரில்லை" என்று பட்டரருளிச் செய்தாரென்று நஞ்ஜீயரருளிச் செய்வர். இது ஓரர்த்தமாயிராமையாலே, 'இங்ஙனே இது சொன்னாலோ" என்று நான்கேட்டேன்; சொல்லலாகாதோ என்ன; "ஆடு" என்று – வெற்றி; இந்த ராக்ஷஸ ஜாதியில் வெற்றி சொல்லக் கடவாரில்லை என்கிறது என்ன; "இதுவேயிறே பொருளென்று அருளிச் செய்தார்" என்று பிள்ளை அருளிச் செய்வர்.

## 10 - 4 - 1. சந்தமலர்க்குழல்தாழ.

(நந்தனித்யாதி) [குணைர்தசரதோபமஃ] "பரமபதத்திலுள்ள ஸ்வாபாவிக குணங்களும், அவதரித்து ஆர்ஜித்த குணங்களும் கூடினால் சக்ரவர்த்தியோடு உபமாநம் மார் மட்டமாய் நிற்குமித்தனை" என்று இத்தை ஜீயரருளிச் செய்ய, "பரம புருஷனுக்கு ஓரிடத்தே பிறந்து ஒரு குணம் தேடவேணுமோ?" என்றார் ஸுந்தர பாண்டிய தேவர். "நாமோடுகிற நரம்பு இவனறிந்திலன்" என்று அத்தை விட்டு, "பரமபுருஷனென்றபோதை அழகிருந்தபடி யென்" என்றாராம். எம்பெருமானார் ஸ்ரீபாதத்தில் அந்வயமில்லாதார், பகவத் விஷயத்தில் சொன்ன ஏற்றமெல்லாம் அர்த்தவாதமென்றிருப்பர்கள். அதுடையவர்கள் பகவத் ப்ரபாவத்துக்கு அவதியில்லாமையாலே சொன்னவை சில சொன்ன வித்தனை சொல்லாததுவே பெரிது என்றிருப்பர்கள்.

## 10 - 10 - 6. கோழிகூவென்னுமால்.

இதுக்குப் பொருளாக ஜீயர் அருளிச்செய்தாராகப் பிள்ளை அருளிச்செய்யும்படி;—"க்ருஷ்ணன் கோழி கூவினவாறே வருமாய், மீண்டு கோழி கூவினவாறே போமாய், வரவை ஸூசிப்பிக்கிற கோழிகூவாநின்றது: பிரிவில் தரிக்க வொண்ணாதபடி கடல்போலே ச்ரமஹரமான வடிவையுடையவர் வருங்கால மாயிற்று; மீண்டு கோழி கூவப்போவர். நடுவு ஸம்ச்லேஷத்துக்குக் காலமில்லை. நான் என்செய்கேன் என்கிறாள்" என்று. "க்ருஷ்ணன் கோழியை மடியிலே இட்டுக் கொண்டுவரும் போலே காணும்" என்று பட்டர் அருளிச்செய்தாரென்று ப்ரஸித்தமிறே.

[விவரணம் ;—கோழிகூவென்மால் ஆழிவண்ணர்வரும் பொழுதாயிற்று; கோழி கூவென்னுமால் தோழி நான் என்செய்கேன்? என்று அந்வயித்துக் கொள்க. கண்ண பிரான், முதலில் சாமக்கோழி கூவினதும் தான் குறித்த பெண்ணுக்குக் காட்சிதரச் சென்று மீண்டும் அக்கோழி கூவினவாறே அவளைவிட்டுப் பிரிவது என்று ஒரு ஸங்கேதமுண்டு. இதனையறிந்த பரகாலநாயகி, தன் தோழியை நோக்கி 'கோழி கூவென்னுமால்

ஆழிவண்ணர்வரும் பொழுதாயிற்று'' என்றாள். கோழி கூவுகின்றபடியால் கடல் வண்ணனான கண்ணபிரான் என்னோடு கலவி செய்தற்கு வருங்காலமாயிற்று என்று மகிழ்ந்து சொன்னபடி. * பலபலவூழிகளாயிடும், அன்றியோா நாழிகையைப் பலபல கூறிட்ட கூறாயிடும் * (திருவிருத்தம்—16.) என்கிறபடியே விச்லேஷகாலம் அனேக கல்பங்களாகவும் ஸம்ச்லேஷகாலம் அதிஸ்வல்பமாகவும் தோற்றுவது இயல்வாதலால் இவள் க்ருஷ்ண ஸம்ச்லேஷம் நடந்து முடிவதாகக் கொண்டு வருந்தித் 'தோழி! நான் என்செய்கேன்? கோழிகூவென்னுமால்' என்கிறாள். ஐயோ தோழி! நான் என்னபண்ணுவேன்? மறுபடியும் கோழி கூவென்னப்போகிறதே. கோழி கூவினால் கண்ணன் போய் விடுவனே! என்றபடி. ஸம்ச்லேஷஸுகத்தையும் விச்லேஷ துக்கத்தையும் ஏகக்ஷணத்திலே அநுபவிப்பதாகச் சொல்லுகிற விதனால் ஸம்ச்லேஷவிச்லேஷங்கள் மாறி மாறி வந்து கொண்டிருக்குமென்பது தெரிவிக்கப்பட்டதாயிற்று. ஸம்ச்லேஷத்தை ஸூசிப்பிக்கின்ற கோழியும் விச்லேஷத்தை ஸூசிப்பிக்கின்ற கோழியும் இப்பாட்டில் ஒருங்கே ப்ரஸ்தாவிக்கப் பட்டமையால் "க்ருஷ்ணன் கோழியை மடியிலேயிட்டுக் கொண்டு வரும் போலேகாணும்" என்று பட்டர் ரஸோக்தியாக அருளிச்செய்வர்.]

## 11 - 2 - 5. அன்னை முனிவதும்.

பூர்வாபரங்களுக்குச் சேர்த்தி போராதாகிலும், பிள்ளையுறங்கா வில்லிதாஸர் "பின்னை மணாளர் திறத்தோமான பின்பன்றோ இவை இப்படியாயிற்று; ஸாமாந்யனென்று இடுமீடெல்லாம் இடவமையுமென்பாரைப்போலே, அவனோடே ஒரு ஸம்பந்தம் சொல்லி நலிகிறவை நலிந்தாலென்" என்பராம்.

[விவரணம் ;—நான் பகவத் விஷயத்தில் கைவைப்பதற்கு முன்னம் தாயானவள் என்னை ஒருவார்த்தையும் பொடிந்து சொல்லியறியாள்; அன்றில் பறவையின் தொனி முன்பு கேட்கப்படும்போது செவிக்கு மிகவும் இனிதாயிருந்தது; அப்போது கடலோசைதானும் காதுகொடுத்துக் கேட்கலாயிருந்தது; உடலும் பூரித்து வளைகள் நெருக்குண்டிருந்தன. இப்போது அநுபவிக்கிற கஷ்டங்களில் ஒன்றும் முன்பு நான் அநுபவித்ததேயில்லை; நப்பின்னைமணாளனை எம்பெருமான் திறத்திலே ஈடுபட்ட பின்பே, தாய் சீறிச்சொல்லும்படியாகவும் அன்றிலின் குரலால் நலிவு படும்படியாகவும் கடலோசைக்கு நோவுபடும்படியாகவும் கைவளைகள் கழலும் படியாகவும் பெற்றேன்—என்பதாக இப்பாட்டின் பொருள். பகவத் விஷய வாஸனையே இல்லாதகாலத்தில் ஸுகமாயிருந்ததாகவும் பகவத் விஷயத்தி லீடுபட்டது முதலாகப் பல கஷ்டங்களை யநுபவிக்கப் பெற்றதாகவும் சொன்னபடி. பாதகபதார்த்தங்களால் நோவுபட்டு வருந்திப் பேசுகிற இப்பதிகத்திலே இப்பாட்டுக்குப் பிள்ளையுறங்கா வில்லிதாஸர் பணிக்குங் கருத்து பிரகரணத்தோடு அவ்வளவு பொருந்தாதாயினும் சுவையுடைத்தாயிருக்கும். அவர் கூறும் கருத்து ஏதென்னில்; அன்னைமுனிவதும் அன்றிலின் குரலீர்வதும் மன்னுமறிகடலார்ப்பதும் வளை சோர்வதும் நாம் பின்னை மணாளர் திறத்திலே யீடுபட்டிருக்கிறோமென்கிற காரணத்தினால் தானே; அந்தக் காரணம்பற்றியாகில் அவை நமக்கு உத்தேச்யமே - என்பதாக.

இங்கு "ஸாமான்யனென்று இடுமீடெல்லாம் இடவமையும் என்பாரைப் போலே" என்றதன் கருத்தாவது—முற்காலத்தில் திருமாலிருஞ் சோலையில் ஸாமான்யரென்றும் சோழியரென்றும் இருவகுப்பினர் ஸன்னிதி கைங்கர்யாதி விஷயமாக அடிக்கடி பிணக்குண்பர்; அதனாலொருவர்க் கொருவர் போர்செய்து வலிதாக அடித்துக் கொள்ளுதலும் நேரும். ஒரு ஸமயத்தில் மிக இருட்டானவிடத்திலே [ஸன்னிதி ப்ரதக்ஷிணத்திலே; கைகலந்து போர் நடக்கையில் ஒரு சோழியர் மற்றொரு சோழியரையே வலிதாகப் புடைத்தார். புடைப்பவருடைய மிடற்றோசையைக் கண்டறிந்த புடையுண்பவர் 'ஐயோ நான் சோழியன் காண்; என்னை ஏதுக்குப் புடைக்கிறாய்?, என்று கதற; அது கேட்ட அவர், 'அப்படியா? தெரியாது அடித்துவிட்டேன், ஸாமாந்யனென்று ப்ரமித்து அடித்துவிட்டேன்' என்ன; அது கேட்ட இவர் 'அப்படியாகில் இன்னமும்

அடியும்; ஸாமான்யனென்று என்னை எவ்வளவு அடித்தாலும் அத்தனையும் எனக்கு உத்தேச்யமே' என்றாராம். அதுபோல, பகவத் விஷயத்திலீடுபட்டேனென்கிற காரணத்தினால் அன்னை முனிவது முதலான கஷ்டங்கள் எனக்கு நேர்வனவாகில் தாராள மாக நேரட்டும் என்பதாகப் பிள்ளையுறங்கா வில்லி தாஸருடைய திருவுள்ளம்.]

### 11 - 5. மானமருமென்னோக்கி—ப்ரவேசம்

“இரண்டு பிராட்டியார் தசை ஏக காலத்திலே கூடும்படி என்?” என்று ஜீயர் பட்டரைக்கேட்க, தேசவிசேஷத்திலே அநேக சரீர பரிக்ரஹம் ஏக காலத்திலே கூடும் படி எங்ஙனே? அப்படியே இவரையும் பார்த்தருளினால் கூடுமிறே. என றருளிச் செய் தார்.

### 11 - 8 - 1. மாற்றமுள வாகிலும்.

நான் பிணைத்த பிணை ஒருவராலும் அவிழ்க்கப் போகாது, என்னையே கால் கட்டி அவிழ்க்கு மன்று கழிக்கலா மென்றாயிறே. பிள்ளை திருநறை யூரரையர் வார்த் தையை நினைப்பது.

### 11 - 8 - 3. தூங்கார் பிறவிக்கள்.

'இதில் அரைக்ஷணம் பொருந்தாதபடியாயிருக்கிற இவர் பாசுரத்துக்கும், இதொழியச் செல்லாதபடியாயிருக்கிற நம்பாசுரத்துக்கும் வாசியறியாதானொருவன் சரண்யனாகப் பெறில், நமக்கு அப்பேறு பெறலாவது' என றருளிச் செய்த தாமே, அநந் தரம் 'மித்ரபாவேந ஸம்ப்ராப்தம்' என்கிறபடியே 'இத்தலையிலுள்ளது போட்கனானாலும் நான் அவனை விடேன்' என்றருளிச் செய்தபடியாலே, நம்க்குப் பெறுகைக்குத் தட் டில்லை" என்றருளிச் செய்தருளினார் நஞ்சீயர்.

### 11 - 8 - 5. கொள்ளக்குறையாத.

உதங்கன் துர்யோதனாதிகள் பட்டுக்கிடக்கிறபடியைக் கண்டு, பிள்ளை பக்கலிலே வந்து, சீற்றத்தாலே சிவந்த கண்களும் தானுமாய் “ஸர்வஸாதாரணனாயிருக்கிற நீ ஒரு தலையில் பக்ஷபதித்து இவர்களை அழியச் செய்தாயே” என்ன; “நானும் இரண்டு தலையும் பொருந்த விடலாமோ வென்று ஆவதெல்லாம் பார்த்தேன்; அவர்கள் ஒரு கோல் குற்று நிலமும் கொடோம் என்ற பின்புகாண் நான் அழியச் செய்தது” என்ன, அவர்கள் இசையும்படியாகவும் நீயே பண்ணவிட்டதென்? என்றானிறே.

[திருவாய்மொழி 7 - 1. உண்ணிலாவிய ஈட்டுப்ரவேசத்தின் முடிவிலும இஃதுள்ளது.]

### 11 - 8 - 6. படை நின்ற பைந்தாமரை.

இப்பாட்டியலருளிச் செய்யும்போது இதுவே அமையுமென்னும்படி அருளிச் செய்தருள்வர்.

### 11 - 8 - 7. வேம்பின் புழு வேம்பன்றி யுண்ணாது.

அநஸூயை, பிராட்டிக்கு “ஸ்த்ரீகளுக்குத் தைவம் பர்த்தாவேகிடீர்; நீர் பெரு மாள் விஷயமாக அநுகூலித்துப்போரும்' என்ன; லஜ்ஜித்தாள். எனக்குப் பெரு மாள் பக்கல் பாவபந்தம் ஸ்வதஃ உண்டாயிருக்கச் செய்தே, அவர்தாம் குணாதிகரா யிருக்கையாலே என்னுடைய பாவபந்தத்தை குண நிபந்தந மென்றிருப்பர்கள் நாட் டார். அவ்வாச்ரயத்தைக் குணங்களோடு வ்யதிரேகித்துக் காட்டவொண்ணாமை யாலே, நான் அவர் பக்கலிருக்கு மிருப்பை அறிவிக்கப் பெறுகிறிலேன்; அவர் குணஹீ நருமாய் விரூபருமானவன்றும் நான் அவர்பக்கல் இப்படி காணும் இருப்பது.

(ஸ்ரீவசந பூஷணத்தில் முதல் ப்ரகரணத்தின் முடிவில் “அநஸூயைக்குப் பிராட் டியருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது” என்ற விடத்து வியாக்கியானமும் ஸேவிப் பது.)

ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலையில்
பெரியதிருமொழியாயிரம் முற்றிற்று.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

# திருக்குறுந் தாண்டகம்.

## 17. பேசினூர் பிறவி நீத்தார்.

(என்பதிவ் வுலகின் வண்ணம்) ஏசுவார்க்கும் அவன் குணங்களைச் சொல்லி யேசவேணுமே. ஆளவந்தார், 'நாட்டையழியாமைக்காக, சிசுபாலனைக் கொற்றவன் வாசலுக்குள்ளே சுழற்றி யெறிந்தானத்தனை, ருசிமுன்னாகப் பெறுவதிறே பேறுவது'' என்று அருளிச் செய்தார்.

# திரு நெடுந் தாண்டகம்.

## 3. திருவடிவில் கரு நெடுமால்.

(கடலமுதம் கொண்ட காலம்)......இவ்விடத்திலே ஜீயர் பட்டரை, "தேவதைகளடங்க நிரம்பிக்கிடக்கச் செய்தே திருமார்பிலே யேறுகை ஸ்த்ரீத்வத்துக்குப் போருமோ" வென்று கேட்க "பர்த்ரு ஸம்ச்லேஷத்திலே யிழியும்போது கலசப்பானை யெடுப்பார்க்குக் கூசவேணுமோ?" என்றருளிச் செய்தார்.

## 5. ஒண்மிதியில் புனலுருவி.

(வணங்கினேன்) ..."த்ரிவிக்ரம த்வச் சரணாம்புஜத்வயம் மதீய மூர்த்தாந மலங்கரிஷ்யதி" என்றார் ஆளவந்தார். "லோகவிக்ராந்த சரணௌ சரணம் தேவ்ரஜம் விபோ" என்றார் உடையவர்.

[லோகவிக்ராந்த சரணாவித்யாதி ச்லோகம் ஸ்வாமி யெம்பெருமானாருடைய ஸ்வகியக்ருதியன்று; பவிஷ்யத் புராண ஸ்திதமென்று ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானத்தில் (4-6) மணவாள மாமுனிகளால் நிரூபணம் செய்யப்பட்டுள்ளது. அந்த வசனத்தை ஸ்வாமி சரணாகதி கத்யத்தில் அநுபாஷித்தது கொண்டு இங்கு உடையவரருளிச் செய்ததாகச் சொல்லிற்று என்க.]

## 6. அலம்புரிந்த நெடுந் தடக்கை.

(கலுழி) கலக்கமும் காணும். ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே கலங்கிப்போகிறபடி. பகவத் விஷயத்தை யநுபவிக்கப்போம் போது அவன் விபூதியை யழித்துக்கொண்டு போகலாமோ வென்னில், விபூதியினழிவு பாரான், இவளாதரத்தையிறே அவன் பார்ப்பது. கண்டாகர்ணன், "ருஷிப்பிணம் இப்போது கொன்றது, இத்தை இப்போது அமுது செய்தருளவேணும்" என்றானிறே. பிராட்டியைக் கண்ட ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, முதலிகள் மதுவநத்தை யழிக்க அத்தைவந்து மஹாராஜர்க்குச் சொல்ல, "நங்கார்யம் க்ருதக்ருத்ய மாயிற்றது" என்று உகந்தார்களிறே மஹாராஜர்களும் ராஜகுமாரர்களும். "த்ருஷ்டா ஸீதா" என்ன வேண்டுவதில்லை.

எம்பார் இவ்விடத்திலே "நடுவே மதுவநமொன்றில்லையாகில் முதலிகளுடைய கிளர்த்தி ராஜகுமாரர்களுடைய முதுகோடே போமித்தனை காண்" என்று அருளிச் செய்வர்.

## 7. வற்புடைய வரைநெடுந்தோள்.

(காவல் பூண்ட)...பிறந்தவன்றே நடை போந்தவளாகையாலே என்றுமொக்கப் பரிவையாயிருக்குமிறே. "தம்பிவளைக் காரியன்றோ" என்று நஞ்சீயரருளிச் செய்வர்.

[வளைக்காரி யென்றது காப்பிடுகிறவள் என்றபடியாய், அதிலிருந்து மங்களாசாஸநபரை என்கிற பொருள் கொள்ளக்கடவது - என்று சில பெரியார் பணிக்கக் கேட்டிருக்கை. இதுவொரு ரஸோக்தி.]

## 9. வங்கத்தால் மாமணி வந்துந்து

(பவள வண்ணா வெங்குற்றாய்)......[ஸாது மா பாணிநா ஸ்ப்ருச]..."கண்ணனது அவன் பின்னே போயிற்று, த்வகிந்த்ரியம் போயிற்றோ இல்லையோ வென்றறியும்படி உன் கையாலே தடவிப் பாராயென்கிறான்" என்று அருளிச் செய்வர் பட்டர்.

## 11. பொன்னாய்.

(குணபாலமதயானாய்) பெரிய முதலியார் பக்கல் தமக்குண்டான ஆதரத்தாலே மன்னனுடைய வடிவழகையும் செருக்கையும் நிலையழகையும் பற்ற உடையவர் 'குண பால மதயானாய்' என்று -* மன்னனாரை யருளிச் செய்வர்.

* மன்னனாரென்றது காட்டுமன்னார் ஸன்னிதி யெம்பெருமான். ஆளவந்தாரிடத்திலும் ஸ்ரீமந் நாதமுனிகளிடத்திலுமுள்ள ஆதராதிசயத்தாலே அவர்களுடைய திருவவதார ஸ்தலப்பெருமானை எம்பெருமானார் விவக்ஷிப்பர் என்றபடி ஃ

## 11. பட்டுடுக்கு மயர்த்திரங்கும்.

(சொல்லென்னச் சொன்னாள்) நெடுநாள் அநுவர்த்தித்துக் கேட்கவேண்டும் வார்த்தையை ஏவச்சொன்னாள். எம்பெருமானாரைப் போலேயும் கீதோப நிஷதா சார்யனைப் போலேயுங் காணும் இக்கட்டுவிச்சி வைபவ மிருப்பது ;—செவி தாழ்த்தார்க்கெல்லாம் வார்த்தை சொல்லிப்போந்தார் உடையவர் ; ருசியைப் பிறப்பித்து வார்த்தை சொல்லிப் போந்தான் கீதோபநிஷதாசார்யன்.

## 13. கல்லெடுத்துக் கன்மாரி காத்தாய்.

"கன்மாரியாகையாலே கல்லை யெடுத்து ரக்ஷித்தான், நீர் மாரியாகில் கடலை யெடுத்து ரக்ஷிக்குங் காணும்" என்று பட்டரருளிச் செய்வர்.

[விவரணம் ; "கல்லெடுத்துக் கல்மாரி காத்தாய்" என்ற சொல் நயத்தை நோக்கி பட்டர் அருளிச் செய்வராம்—'கல்மழையாகையாலே கல்லையெடுத்து ரக்ஷித்தான் ; நீர்மழையாகில் கடலை யெடுத்து ரக்ஷிக்குங் காணும்' என்று. இதைக் காண்பவர்கள் 'கடலையெடுத்து மழைதடுப்பது எங்ஙனம் ?' என்று சங்கிப்பார்கள். பட்டருடைய திருவுள்ளம் யாதெனில் ; இன்னதைக் கொண்டு இன்னகாரியஞ் செய்வதென்கிற நியதி எம்பெருமானுக்கில்லை யென்பதும், ஸர்வசக்தனுக்குக் கூடாத தொன்றில்லை என்பதுமே.]

## 14. முளைக்கதிரைக் குறுங்குடியுள்.

(வணங்கினாளே) அஞ்சலி ஸாத்மித்ததிறே யென்னாக் காலிலே விழுந்தாள். உடையவர், முதலிகளும் தாமுமாக நீராட வெழுந்தருளுகிற போதை ஸமூஹத்தைக் கண்ட ப்ரீதியாலே பெரிய நம்பி தெண்டனிட, "விநயம் பாவிப்போமாகில் தெண்டனை ஸ்வீகரித்தோ மாவுதோம்" என்று பேசாதே யெழுந்தருளினாரிறே.

## 16. கன்று மேய்த்தினிதுகந்தகாளாய்.

(கடிபொழிலித்யாதி) அவ்வவ காலத்திற் பிற்பட்டாரையும் ரக்ஷிக்க வன்றோ திருக்கண்ணபுரத்திலே வந்து போக்ய பூதனாய் நின்றருளிற்று ; இது பூருவர்கள் நிர்வாஹம். "பசுக்கள் கைகழியப் போகையாலே அவற்றை மறிக்கப் போனவிடத்திலே ச்ரமஹரமா யிருப்பதொரு பொழிலைக் கண்டு திருவாய்ப்பாடியாக நினைத்துப் புக்கான். அப்பொழில் மயல்மிகு பொழிலாகையாலே கால்வாங்க மாட்டிற்றிலன்" என்றருளிச் செய்வர் பட்டர். அதுக்கு ஹேது, அவதாரத்திலும் அர்ச்சாவதாரத்திலும் தமக்குண்டான ஸ்வரூபைக்ய ப்ரதிபத்தியாலே யருளிச் செய்தார்.

(அவ்விடத்திலேயே.)

(மன்றமரக் கூத்தாடி) மன்று அமருகையாவது - கூத்தாடி விட்டாலும் மன்று நிருத்தகந்தியா யிருக்கை; "பெருமாளெழுந்தருளிப் புக்க திருவீதிபோலே காணும் திருவாய்ப்பாடியிலம்பல மிருப்பது" என்றருளிச் செய்வர் பட்டர்.

## 17. பொங்கார் மெல்லிளங் கொங்கை

(நங்காய்) "முகரி" என்று பூர்வர்கள் நிர்வாஹம். அதாகிறது—அவன்றன் மேல்விழுகிற தொழிய நீ விதக்த்தையாய் இப்படி மேல் விழக்கடவையோ வென்கை. அதவா "பூர்ணையானவளே" என்று பட்டர் அருளிச் செய்வர்.

## 18. கார்வண்ண ந் திருமேனி.

(எம்பெருமான் திருவரங்கம் இத்யாதி) "இப்பெண் பிள்ளை ஆற்றிலே கெடுத்துக் குளத்திலே தேடுகிறாள், இது வன்றோ நிறைவழிந்தார் நிற்குமாறு" என்று பிள்ளை அருளிச் செய்வர்.

["எம்பெருமான் திருவரங்க மெங்கே?" என்று கேட்டவளுக்கு வழிசொல்வாரார்? ஒருவரும் வாய்திறந்திலர்; அதற்குமேல் தானே சொல்லுகிறாள்—நீர் வண்ணன் நீர்மலைக்கே போவென்னென்கிறாள். திருவாலி திருநகரியில் நின்றும் புறப்பட்டுத் திருநீர்மலைக்குப் போய் அங்கு நின்றும் திருவரங்கம் பெரியகோயிலுக்குப் போகவேணும் என்று இங்ஙனே இவள் வழிகண்டிருக்கிறாள். கோவிலிலே கெட்டுப்போனதொரு பொருளைக் குளத்திலே தேடுமாபோலே யிருக்கின்றது இவள்படி.]

## 21. மைவண்ண நறுங் குஞ்சி.

(மைவண்ணம்) "மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம்" என்றவித்தை ஸங்க்ரஹமாக மூன்று பத்துக்கும் வாக்யார்த்தமாக வருளிச் செய்வர் பட்டர்.

(அவ்விடத்திலேயே)

(ஆட) ஒரு கடல் அசைந்து வந்தாற் போலே காண் வருகிறபோது இரண்டருகும் திரு மகரக் குழைகள் அசைய வந்தபடி. "அபிமத விஷயத்தைக் கண்டால் முகத்திலே சில அசைவுகளுண்டாகக் கடவது" என்று பட்டரருளிச் செய்வர். அங்ஙனன்றியே, "முன்பைக் காட்டுவது, பின்பைக் காட்டுவது, எத்தனை செய்தான் இவள் ஸ்த்ரீத்வத்தை யழிக்க" என்று நஞ்சீயரருளிச் செய்வர்.

(அவ்விடத்திலேயே)

(அஞ்சினோமே) இருய்த்தோமே. அபயஸ்த்தாநத்திலே காண் பயபுத்தி பண்ணிற்று. "(நாமஞ்சினோம்) என்று ஸ்ரீஜநகராஜன் திருமகள் வார்த்தையா யிருந்தபடி கண்டாயே!" என்று நஞ்சீயரருளிச் செய்வர்.

## 25. மின்னிலங்கு திருவுருவும்.

(பொன்னித்யாதி)......பொன்போலே யலர்ந்து பரிமளிதமாயிருந்துள்ள பூவையுடைத்தான செருந்திப் பொழிலினூடே ச்ரமஹரமான கோயில் நம்மூரென்று போயினார். திருநகரியில் நின்றும் கோயிலளவுஞ் செல்லப் பொழிலாய்க் கிடந்ததோ வென்னில்; "ஒரு காளமேகம் வர்ஷித்துக் கொண்டு போகா நின்றால் கண்ட விடமெங்கும் தளிரும் முறியுமாகாதோ" என்று பட்டரருளிச் செய்வர்.

(அவ்விடத்திலேயே)

விக்ரம சோழதேவன், "உங்கள் தலைமகள் பிரிந்தவிடத்தில் சொன்ன கவியென்" என்ன; "அவள் 'எலும்பும் சாம்பலு முடையவன்' என்றாள்; இவள் 'மின்னிலங்கு திருவுருவம்' என்றாள்" என்ன; "தன் காலிலே துகையுண்டவனைத் தோழிக்குச் சொல்லா நிற்க (திருவுரு) என்பதே! இவள் தலைமையுடையவள்; அவள் பிணங் தின்னி" என்றான்.

[விவரணம் ;—விக்ரம சோழதேவனென்னுமரசன் தமிழில் ரஸிகனாயிருந்தான் அவனது ஸபையில் ஸ்ரீ வைஷ்ணவ பண்டிதர்களும் சைவபண்டிதர்களும் அடிக்கடி வருவதுண்டு. ஒருகால் இருசமயத்து வித்வான்களும் கூடியிருந்தபோது அவ்வரசன் கேட்டான்—'தலைமகன் பிரிந்தபோது தலைவி இன்னாப்போடே சொல்லும் பாசுரம் எங்ஙனேயிருக்கிறது? சொல்லுங்கள், கேட்போம்' என்றான். ஸ்ரீ வைஷ்ணவ வித்வான் * மின்னிலங்கு திருவுருவும் பெரியதோளும் * என்று தொடங்கி இப்பாசுரத்தை யெடுத்துச் சொன்னார். சைவவித்வான் "எலும்புஞ் சாம்பலு முடையவனிறைவன்" என்று தொடங்கி ஒரு செய்யுளைச் சொன்னான். இரண்டையுங்கேட்ட அரசன் "நெஞ்சில் கிலாய்ப்போடே (க்லேசத்தோடே) சொல்லச் செய்தேயும் * மின்னிலங்கு திருவுருவும் * என்று நெஞ்சு பிணிப்புண்ணுமாறு சொன்னவளே உண்மையில் தலைமையுடையவள்; மற்றொருத்தி பிணந்தின்னி" என்றானாம்.]

## 26. தேமருவு பொழிலிடத்து

(அறுகால சிறுவண்டே)"த்வி பாத்தாயிருத்தல், சதுஷ்பாத்தாயிருத்தல் செய்கையன்றியே, கமநஸாதநமான கால்கள் ஆறுண்டாகப் பெற்றேனென்கிறாள்" என்று பூர்வர்கள் நிர்வாஹம். "வண்டுக்கு கமநஸாதநம் சிறகாகையாலும், மேலே, தொழுதேன்" என்கையாலும், என்தலையிலே வைக்கைக்கு ஆறுகாலுண்டாகப் பெற்றேனென்கிறாள்" என்று பட்டரருளிச் செய்வர்.

[விவரணம் ;—(அறுகால சிறுவண்டே தொழுதேனுன்னை) வண்டுக்கு ஆறுகால்களுள்ளமை இயல்வாதலால் இவ்விசேஷணம் இங்கு ஏதுக்கு? என்று கேள்வி பிறக்கும். இரண்டு காலாகவும் நான்கு காலாகவு மின்றிக்கே விரைந்து செல்லுகைக் குறுப்பாக ஆறுகால்கள் இருக்கப்பெற்றதே! என்று மகிழ்ந்து கூறுவதாகச் சில ஆசார்யர்கள் நிர்வஹித்தார்களாம். இந்த நிர்வாஹத்தில் ஸ்வாரஸ்யமில்லை. வண்டு செல்லுதற்குச் சாதனம் சிறகேயன்றிக் கால்களல்லவே. ஆதலால் 'அறுகால' என்னு மடைமொழிக்கு அங்ஙனே கருத்துரைத்தல் பொருந்தாதென்று, பட்டர் அருளிச்செய்வதாவது—* தொழுதேனுன்னை*என்று மேலேயிருக்கையாலே என்தலையிலே வைப்பதற்கு ஆறுகால்களுண்டாகப் பெற்றதே! என்று உகந்து சொல்லுகிறபடி - என்பதாம். தூது சென்று மீண்டு வந்தால் வண்டின் கால்களைத் தன்தலை நிறையவைத்துக்கொண்டு கூத்தாடக் குதூஹலித் திருப்பதனால் அதற்குச் சேர இங்ஙனே கருத்துரைத்தல் மிகப் பொருந்தும். வண்டென்பது பகவத்குண மதுபாநரஸிகரான ஆசார்யரை. "ஆசார்யவத் ஆசார்ய புத்ரே ஆசார்ய தாரேஷு ச வ்ருத்தி:" ஆகையாலே அம்மூவர் கால்களுஞ் சேர்ந்து ஆறுகால்களாகும். திருவாய்மொழியில் "எங்கானலகங் கழிவாயிரைதேர்ந்து இங்கினிதமருஞ் செங்காலமடநாராய்! திருமூழிக்களத்துறையும், கொங்கார் பூந் துழாய் முடியென் குடக் கூத்தற்கென் தூதாய், நுங்கால்க ளென்தலைமேல் கெழுமீரோ நுமரோடே" (9-7-1) என்ற பாசுரத்தின் ஈற்றடி இங்குக்குறிக்கொள்ளத் தக்கது.]

## 21 செங்கால மடநாராய்.

(திருக்கண்ணபுரம் புக்கு) ருஷிகளும் அல்லாத ஆழ்வார்களும் சொல்லுமா போலேயன்று காணும் இவர் திருக்கண்ணபுர மென்றுலிருக்கும்படி. அவர்களள வன்றே இவர்க்கு அவ்வூரிலுண்டான பாவபந்தம். அனந்தாழ்வான் "திருவேங்கட முடையான்" என்னுமாபோலேயும், பட்டர் "அழகிய மணவாளப் பெருமாள்"என்னு மாபோலேயும், சோமாசியாண்டான் "எம்பெருமானுரே சரணம்" என்னுமாபோலே யும் இராதிறே நாம் திருநாமங்களைச் சொல்லும்போது.

## 29. அன்றாயர் குலமகளுக்கு.

(அலைகட லித்யாதி) பிராட்டிக்கு உதவின படியை யருளிச் செய்கிறுர். இவ் விரண்டு அபதாநத்திலும் பிராட்டியை லபிக்கைக்காகக் கடலைக் கடைந்தது; அவ ளுடைய தனிமையைத் தீர்க்கைக்காகக் கடலை யடைத்தது; அம்ருத ப்ரதாநமும் குடி யிருப்புக் கொடுக்கையும் ஆநுஷங்கிகமிறே. அவனுடைய திருவுள்ளத்தை அடி யொற்றின ஆளவந்தார், "யதர்த்தம்ம்போதிரமந்த்யபந்திச" என்றுரிறே.

ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலையில்
**பெரிய திருமொழி,**
**திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டக முட்பட**
இரண்டாவதாயிரம் முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.